

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 17 Issue 6
ஆண்டு 17 இதழ் 6

January 2023 Rs.25
ஜனவரி 2023 ரூ.25

பிரபு திலக்
நாரணோ ஜெயராமன்
எஸ். வைத்தீஸ்வரன்
ரதன்
செவல்குளம் செல்வராசு
கருணாகரன்
டி. கண்ணன்
கலாப்ரியா
சந்தியா நடராஜன்
விட்டல்ராவ்
வீணை எஸ். பாலசந்தர்
தினகரன் ஜெய்
வோலே சோயிங்கா
ஸிந்துஜா
கி. சரஸ்வதி
இந்திரா பார்த்தசாரதி

# காசி தமிழ் சங்கமம்

ராஜ்ஜா

ஆண்டு 17 இதழ் 06



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜனவரி-2023 விலை ரூ. 25





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்...

# பிடிஎஃப் பைரஸியும் வெளியீட்டாளர்கள் கவலையும்

**பிரபு திலக்**

'அமேசான் கிண்டில்' தொடங்கி 'பிஞ்ச்', 'பீட்லி', 'பிரதிலிபி' என நூற்றுக்கணக்கான 'ரீடிங் அப்'கள் இப்போது வந்துவிட்டன. இந்த டிஜிட்டல் வாசிப்பு புத்தக சந்தையை பாதிக்கும் என்ற எண்ணம் ஆரம்பத்தில் பெரும்பாலானவர்களிடம் இருந்தது. ஆனால், பாதிக்கவில்லை என்பதுதான் கடந்த சில ஆண்டுகளில் சென்னை மற்றும் பல்வேறு மாவட்ட தலைநகரங்களில் நடந்துவரும் புத்தகக் காட்சிகள் பதிப்பாளர்களுக்கு தந்துள்ள அனுபவம், நம்பிக்கை.

டிஜிட்டல் வாசிப்புக்கு முன்பே அச்சுப் புத்தகங்களின் விற்பனை ஆன்லைனில் தொடங்கி யிருந்தது. இது நேரடி விற்பனையை விட அதிகமாகி அச்சுப் புத்தக தொழிலை பலப்படுத்தத்தான் செய்தது. ஆனால், புத்தகக் கடைகளை பாதித்தது. குறிப்பாக அமேசான், பிளிப்கார்ட் போன்ற இணைய தளங்கள் விற்பனையால் புத்தகக் கடை என்ற கலாசாரமே உடைத்துவிட்டது. சென்னையில் ஐந்துக்கும் மேற்பட்ட 'லேண்ட்மார்க்' புத்தகக் கடைகள் இருந்தன; டாடா என்ற பெரிய நிறுவன பின்புலம் இருந்தும் அந்த கடைகளால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. ஆக்ஸ்போர்ட், கிராஸ்வேர்டு போன்ற புத்தகக் கடைகளுக்கும் இதுதான் ஆனது. சென்னை மட்டுமல்ல பெங்களூரு, மும்பை என்று எங்குமே இப்போது அதன் தடயங்கள் இல்லை.

இது டிஜிட்டல் வாசிப்பு பரவலான பின்னர் அச்சுப் புத்தகங்களுக்கு நிகழும் என்று எதிர்பார்க்கப்பட்டது. காரணம், புத்தகங்கள் வீட்டில் இடத்தை அடைக்கும்; தூசி படியும்; அதற்கு பதிலாக கிண்டிலில் அல்லது அதுபோன்ற 'ஆப்'களில் படிக்கலாம் என்று நவீன இளைஞர்கள் நினைக்கிறார்கள். ஆனாலும், அச்சில் படித்துப் பழகியவர்கள் அதிலிருந்து மாறத் தயாராக இல்லை என்றே தெரிகிறது.

அதேநேரம் 'கிண்டில்' மூலமாக இன்னொரு பிரச்சினையை பதிப்பகங்கள் சந்திக்கிறது. அது பைரஸி.



கிண்டிலில் வெளியாகும் பிரபல எழுத்தாளர்களின் புத்தகங்களை உடனே திருடி பிடிஎஃப் கோப்பாக மாற்றிவிடுகிறார்கள். இதுபோன்ற 'திருட்டு பிடிஎஃப்' புத்தகங்களைப் பகிர்ந்துகொள்ளவே 'புத்தகங்கள் வாசிப்போம்', 'புத்தகங்களை நேசிப்போம்' எனப் பல 'வாட்ஸ் அப்', 'டெலிகிராம்', 'ஃபேஸ்புக்' குழுக்கள் உள்ளன. அவற்றில் பகிர்கிறார்கள். ஒவ்வொரு குழுவிலும் 1000 தொடங்கி 3000 பேர் வரை இருக்கிறார்கள். இவர்கள் மூலமாக ஒருவரிடம் இருந்து இன்னொருவருக்கு, அவரிடம் இருந்து மற்றொருவருக்கு என அந்த 'பிடிஎஃப்' புத்தகங்கள் விநியோகம் ஆகிக்கொண்டே இருக்கிறது.

ஃபேஸ்புக், ட்விட்டர், இன்ஸ்டாகிராம் போன்ற தளங்களில் ஒரு புதிய புத்தகம் குறித்து செய்தி வெளி யிடும்போது, உடனே கமெண்டில் வந்து, இதற்கு பிடிஎஃப் கிடைக்குமா என்று பதிப்பாளரிடமே கேட்கிறார்கள். அது பெரிய தவறில்லை என்ற எண்ணம் அவர்களுக்கு இருக்கிறது என்பதையே இது காட்டுகிறது.

இது சட்டத்துக்கு புறம்பானது என்று தெரியாமலே பலர் இதை செய்கிறார்கள். பதிப்புலகம் மிகவும் நெருக்கடியில் இருக்கும் ஒரு காலகட்டத்தில் இது எவ்வளவு தவறானது; பதிப்பாளர்களை இது பாதிக்கக்கூடியது என அவர்கள் உணர்வதில்லை. இலவசமாகத்தானே கொடுக்கிறோம்; இதனால் வாசகர்கள் அதிகரிக்கத்தானே செய்வார்கள்; வாசிப்பு பழக்கம் பரவலாவது நல்லதுதானே; அச்சு புத்தகங்களை வாங்க முடியாத வசதியற்றவர்களிடையே புத்தகங்களை கொண்டு செல்ல ஒரு வாய்ப்பாக இந்த திருட்டு பிடிஎஃப் நூல்கள் உள்ளது என்று அவர்கள் நினைக்கிறார்கள்.

தமிழின் முக்கிய நூல்கள் அனைத்தும் மட்டுமல்லாமல் சில எழுத்தாளர்களின் 100 சதவிகித புத்தகங்களும் இப்படி பிடிஎஃப் கோப்புகளாக கிடைக்கின்றன.



அமேசான் கிண்டிலில் வெளியாகாத நூல்களும் இப்படி பிடிஎஃப் கோப்புகளாக கிடைக்கின்றன என்றாலும், மற்ற வழிகளைவிட கிண்டிலில் இருந்து புத்தகங்களைத் திருடுவது சுலபமாக இருக்கிறது என்றே தெரிகிறது. ஏனெனில், கிண்டிலில் வெளியான உடனே அந்த புத்தகத்துக்கு பைரஸி வந்துவிடுகிறது. மேலும், கிண்டிலில் வந்த பின்னர்தான் இப்படி பிடிஎஃப் புத்தகங்கள் 'சர்குலேட்' ஆவதும் அதிகரித்துள்ளது. இதனால், சிறு அளவில் புத்தக விற்பனை பாதித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

சரி, இப்படி புத்தகங்களை பிடிஎஃப் கோப்பாக உலவ விடுபவர்களின் 'நல்ல நோக்கம்' படி அந்த பிடிஎஃப் புத்தகங்களை எல்லாம் வாசகர்கள் படிக்கிறார்களா? நிச்சயம் வாய்ப்பில்லை என்பதுதான் பலரது பதிலாக இருக்கிறது. 5 - 10 சதவிகிதம் பேர் படிக்கலாம்; உதாரணமாக 1,000 பேருக்குச் சென்றால் எல்லோருமே டவுன்லோட் செய்துகொள்வார்கள். ஆனால், அதில் 50 - 100 பேர்தான் படிப்பார்கள்.

எனது எழுத்தாள நண்பர் ஒருவரின் நூலை இதுபோல் திருடி பிடிஎஃப் புத்தகமாக வெளி யிட்டுவிட்டார்கள். அது உலகம் முழுவதும் சுற்றி, அவர்தான் அந்த நூலை எழுதியவர் என்பது தெரியாத அவரது சில நண்பர்களுக்கும் சென்று, 'இவர் புத்தகம் படிப்பவர் ஆயிற்றே, எனவே அவருக்கு அனுப்புவோம்' என்ற நல்லெண்ணம் கொண்டு அவர்கள் அவருக்கே அனுப்பி வைத்த கதை நடந்துள்ளது.

பதிப்பாளர்கள் நட்டப்பட்டால் பதிப்பு தொழிலையே விட்டு வெளியேற வேண்டியதுதான். இதனால் புதிதாக நூல்கள் வெளியாவதே குறைந்துவிடும் என்பது குறிப்பிடத்தக்கது.

தூரத்தில், குறிப்பாக வெளிநாடுகளில் வசிப்பவர்கள் மத்தியில் நூல்களை விரைவாக கொண்டு செல்ல மின் புத்தகங்கள் மிக நல்ல வாய்ப்பு. ஆனாலும், இந்த திருட்டு பிடிஎஃப் பிரச்சினை காரணமாக பல பதிப்பாளர்களும் தங்கள் நூல்களின் டிஜிட்டல் வடிவத்தை வெளியிட தயங்குகிறார்கள்.

திரைத்துறையில் பைரஸி பிரச்சினை ஒரு பெரும் அபாயமாக உருவெடுத்துள்ளது. தங்கள் பிரபல்யம், உயர் அதிகாரமட்டங்களில் இருப்பவர்களுடான நெருக்கம் போன்றவை இருந்தும் திரைத்துறையினரால் சட்டத்தின் உதவியுடன் பைரஸியை கட்டுப்படுத்த முடியவில்லை. இந்நிலையில், பதிப்பாளர்கள் எம்மாத்திரம். 'திருடனாய் பார்த்து திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது' என்ற பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் தீர்க்கதரிசனத்தைப் போல், 'நல்ல நோக்க'ங்களுடன் பிடிஎஃப் புத்தகங்களை பரப்பும் வாசகர்கள்தான் இதன் தவறை உணர்ந்து இதில் ஈடுபடாமல் தவிர்க்கவேண்டும்.●

நாரணோ ஜெயராமன்

# சத்திய தருணங்களைத் தேடி

எஸ். வைத்தீஸ்வரன்

பிறந்த கணம்தான் நம் வாழ்க்கையின் மிக சத்தியமான தருணமாக இருக்க வேண்டும். காலம் நகர நகர நம்மேல் தோல்மாதிரி பல அமானுஷ்யமான திரைகள் வளர்ந்து வளர்ந்து நம் சுயத்தை மறைத்துக்கொண்டே நம் வயதை வளர்த்துகின்றன அல்லது பௌதீகப்படுத்துகின்றன.

பிறகு புத்திசாலித்தனத்தையெல்லாம் சேகரித்துக்கொண்டு பல முன்னோடி சிந்தனைகளை நமக்குள் நிரப்பிக்கொண்டு மீண்டும் நாம் நம் சுயத்தைத் தோண்டியெடுக்க ஆர்வம் கொள்கிறோம். அந்த ஆர்வம் தீராத ஏக்கமாக, தொன்மையான தாகமாக, விசாரமாக, நெக்குருகித் தேம்பும் துக்கமாக, விரக்தியாக, தவமாக இப்படி பலவித அவஸ்தைகளை நாம் தீவிரமாக அனுபவிப்பதே நம் வாழ்க்கையாக மாறிவிடுகிறது.

இப்படி ஏன், ஒரு தவிர்க்க முடியாத நிர்ப்பந்தத்துக்கு நாம் தள்ளப் படுகிறோம்? புறவாழ்க்கை திடீரென்று ஏன், காரணமில்லாமல் ஒவ்வாமை ஆகிவிடுகிறது? காலம் நம்மை ஏன் ஏமாற்றிக்கொண்டிருப்பதாகவே ஒரு உணர்வு நமக்குள் உறுத்திக்கொண்டே இருக்கிறது? பார்ப்பதெல்லாம் முடிவான சத்தியம் இல்லையென்பதும், சத்தியத்தைக் கண்டுணருவதுதான் நம் ஜீவித நோக்கம் என்பதும், நமக்குள் உந்துதல் நேருவதற்கு பல பிரத்யட்சக் காரணங்களும் நமக்குத் தோன்றுகின்றன. ஒரு வாகனத்தை ஒருவன் வாழ்க்கை முழுவதும் ஓயாமல் துடைத்துத் துடைத்து பிரித்து மாட்டிக்கொண்டே இருப்பதுதான் அவனுக்கு விதிக்கப்பட்ட காரியமா? அந்த வாகனத்தின் சிருஷ்டிப் பயனை, அழகான ஓட்டத்தை, மேடுகளிலும் பள்ளங்களிலும் மலைகளிலும் காடுகளிலும் கடக்கும் அதன் அற்புதமான, சுகமான பாய்ச்சலை என்றாவது அனுபவம் கொள்வானா?



மெய்ஞானம் என்பது ஒரு மாயமான்; வெறும் வார்த்தை: விரலை விரலால் பிடிக்கவே முடியாது என்று ஒரு கருத்தும் நம்மை பலராமயம் சமாதானப்படுத்துகிறது.

நாரணோ ஜெயராமன் அன்றாடம் மனக் காகிதத்தில் தனக்கு மட்டும் எழுதி வைத்துக்கொண்ட மனக்குறிப்புகள் போன்ற வீர்யமான சின்னச்சின்ன கவிதை வரிகள் என்னை மேற்கண்ட எண்ணப் பான்மைக்குத் தாண்டிவிட்டன.

நாரணோ ஜெயராமன், எழுபதுகளில் புதுக்கவிதையின் இளம்பிராயத்திலேயே இத்தகைய தனித்தன்மை வாய்ந்த குறுங்கவிதைகளை எழுதிக் கவனம்பெற்றவர். ‘கசடதபற’, ‘ஞானரதம்‘ போன்ற சிறந்த சிறுபத்திரிகைகளில் பிரசுரம் கண்டவர்.

பிரெஞ்சுக் கவிஞன் ஆர்தர் ரைம்போ மாதிரி ஏழெட்டு வருடங்களுக்குள்ளாகவே தனக்குள் சொல்ல நினைத்ததை காத்திரமான சொற்களில் சொல்லிவிட்டு மௌனத்தில் அமைதியில் ஆழ்ந்துபோனவர்.

இவர் படைப்புகள் எல்லாமே, கவிதைகள் என்று பொதுவாக சொல்லப்படும் சில கவர்ச்சிகரமான அம்சங்களைத் தாண்டி சீரிய தனிமையில், நுண்மையாக செதுக்கப்பட்ட உள்ளோசைகள்.

அநேகமாக, எல்லா வரிகளுமே மிக எளிமையாக, ஆதங்கமாக, வேதாந்தமாக புறவாழ்க்கையின் அவசங்களால் தன்னியல்பாக எழும்பிய கேள்விகள்.

வாழ்வைப் பற்றியும் காலத்தைப்






பற்றியும் பிரபஞ்சத்தைப் பற்றியும் மரணத்தைப் பற்றியும் அதன் மர்மங்களை புரிந்துகொள்ளத் தவிக்கும் ஏக்கங்களுடன் எழுப்பப்படும் கேள்விகள்... விசாரங்கள்... சமாதானங்கள்.

"வாழ்வை ஒரு பொறியில் கண்டு துன்புறுகிறேன், ஒன்றவும் முடியாமல் வேறாய் விலகவும் முடியாமல்..." என்கிறார்.

புற வாழ்க்கையின் அநிச்சயங்களால், ஆழமற்ற அலைக்கழிப்புகளால், அமைதி ஒரு கானல்நீராய் நம்மை அலைக்கழிக்கும் நிகழ்வுகளால், ஒரு மிக நுண்மையான கள்ளமற்ற மனம் தீர்வுக்காக அலையும் தீர்வற்ற போராட்டம்தான், இப்படிப்பட்ட வெளிப்பாடுகளைக் கவிதைகளாக இவருக்குச் சொல்லத் தூண்டுகின்றன. கிருஷ்ண பரமாத்மாவின் வேதங்கள், தத்துவஞானிகள் ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி, மார்ஸல் ப்ரௌஸ்ட், இமானுவேல் கான்ட் இவர்கள் யாருமே இவருக்கு விடையளிப்பதில்லை.

'நான் நானாக இருத்தல் என்று ஒன்று உண்டா?' என்று கேட்டுக் கொள்கிறார். கண்ணாடித் தரையில் விழுந்த பாம்பாக இவருடைய வாழ்க்கையின் வியர்த்தமான அசைவுகள் மீண்டும் மீண்டும் விடுதலையைக் கனவு காண்கின்றன. சுயவீரியத்துடன் சார்பில்லாமல் இவர் தேடும் வாழ்க்கையின் புதிர்களுக்கு அங்கங்கே அவ்வப்போது, மனித வாழ்க்கையை யோகமாக அமானுஷ்யமான அருளுக்குப் பாத்திரமாகும் யோக்யதையுடன், புனித விரதங்களுடன் அணுகவேண்டுமென்ற, இந்து மத ஆச்சாரியார்களின் போதனைகளும் இவருக்கு, சில புரிதல்களில் ஒரு கலங்கரை விளக்கமாகத் தெரிகிறது.

இவருடைய கேள்விகள் பிரபஞ்சபூர்வமானவை. நிரந்தரமானவை. எப்போதும் புதுமை குறையாததாக வாசிக்கும் சீரிய உள்ளத்தை எப்போதும் பல வினோதமான, விபரீதமான திசைகளில் சிந்திக்கத் தூண்டுபவை. தட்சிணாமூர்த்தியின் மௌனம்போல.

'நான் எனப்படுகிற என்னையும் சேர்த்து எல்லாவற்றையும் அக்குவேறு ஆணிவேறாகக் கழட்டிப் பிரித்துப் பார்த்து விட்டேன்... என்னவோ இருக்கிறோம்... என்னவோ செய்கிறோம். எதுவும் சாத்தியமில்லை! மொத்தத்தில் ஒன்றுமில்லை போங்கோ!" என்கிறார்.

ஆனால் இந்தக் கவிதை ஆழமானது... அவ்வளவு எளிமையானதல்ல! உயிரோடு மனிதனை அறுவை சிகிச்சை செய்து திறந்து பார்த்து உயிர் இருக்கும் இடத்தைத் தேடிக் கண்டுபிடிக்க முயற்சிக்கும் பிரும்மாண்டமான அபத்தத்தை (Colossal Absurdity) நுண்மையாகச் சுட்டிக் காட்டுகிறது.

எப்போதும் வாசிக்கக்கூடிய பிரபஞ்சக் கவிதைகளை எழுதியவர் நாரணோ ஜெயராமன்.

"எஸ். வைத்தீஸ்வரன்" <vydheesw@yahoo.com>

Argentina, 1985
2022, Drama, 2h 20m

# ஒரு போதும் வேண்டாம்!

**ரதன்**

அனற்றோல் லரபெயிற்றி-க்கு அப்பொழுது நான்கு வயது. புரட்டாதி 26, 1976 அன்று துப்பாக்கிச் சூட்டுச் சத்தங்கள் தொடர்ச்சியாக கேட்டுக் கொண்டிருந்தன. தந்தையார் நிலத்தில் வீழ்ந்து கிடந்தார், தாயார் தந்தைக்கு அருகில் விழுந்து கிடந்தார். அதன் பின்னர் அனற்றோல் தனது பெற்றோரைக் காணவில்லை.

அர்ஜென்டினா ராணுவத்தினர் அனற்றோலையும் அவனது 18 மாத சிறிய தங்கை விக்ரோரியா ஈவாவையும் கைதிகளாக்கி ஒரு வாகனம் பழுதுபார்க்கும் சிறிய இடத்தில் அடைத்து வைத்தனர். அது ஒரு ராணுவ சித்திரவதைக் கூடமாகவும் மாறியிருந்தது. ஐப்பசி மாதம் இச் சிறுவர்கள் உருகுவேயின் தலைநகருக்கு கொண்டு செல்லப்பட்டனர். (அனற்றோல் லரபெயிற்றியின் குடும்பம் உருகுவேயில் இடதுசாரிகள் களையெடுப்பு நடைபெற்றதை அடுத்து அர்ஜென்டினாவிற்கு 1973இல் குடிபெயர்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.) கார்த்திகை மாதம் இச் சிறுவர்கள் சிலேக்கு கொண்டு செல்லப்பட்டனர். மூன்று மாதங்களுக்குள் மூன்று நாடுகளுக்கு கடத்தப்பட்டனர். அப்போது இந்த மூன்று நாடுகளிலும் அமெரிக்க சார்பு அரசுகள் ஆட்சியிலிருந்தன. அதிர்ஷ்டவசமாக இச் சிறுவர்கள் இருவரும் பல் வைத்தியர் ஒருவரால் ஒன்றாக தத்து எடுக்கப்பட்டனர்.

அனற்றோலைப் போல் பல சிறுவர்கள் பெற்றோரி-டமிருந்து நிரந்தரமாக பிரிக்கப்பட்டிருந்தனர்.

அமெரிக்க அரசு செயல்பட்டது. லத்தீன் அமெரிக்க நாடுகளில் இடதுசாரி அரசுகளை மாற்றியமைப்பதில் அமெரிக்கா இடைவிடாது செயல்பட்டு வந்தது. அது இன்றும் தொடர்கின்றது.

அர்ஜென்டினாவில் 1946-1952 வரை ஜுவான் பெரோன் ஜனாதிபதியாக இருந்தார். இவர் ஒரு முன்னாள் ராணுவ தளபதி. 1952இல் மீண்டும் ஜனாதிபதியாக தேர்வு செய்யப்பட்டார். 1955இல் ராணுவம் ஆட்சியைக் கைப்பற்றியது. பின்னர் 1973இல் தேர்தலில் வெற்றி பெற்று 1974இல் இறக்கும் வரை ஆட்சி செய்தார். இவரது இரண்டாவது மனைவி பிரபல நடிகையும் தொழிற்சங்கவாதியுமான, ஈவா டுவார்டே (எவிடா) ஆவார். (இவரது வாழ்வை மையமாகக் கொண்டு பல படங்கள் வெளிவந்துள்ளன. 1996இல் வெளிவந்த 'Evita' படத்தில் எவிடாவாக மடோனா நடித்துள்ளார். இப் படம் ஒரு Musical Historical Drama ஆகும்.)

ஜுவான் பெரோன் 1974இல் இறந்த பின்னர், இவரது மூன்றாவது மனைவி இசபெல் பெரோன் ஜனாதிபதியாக பதவியேற்றார். இவர்தான் அர்ஜென்டினாவின் முதல் பெண் ஜனாதிபதி. இவரையும் ஒரு மார்க்சியவாதியாக அமெரிக்கா முத்திரை குத்தியது. விளைவு பங்குனி 24, 1976இல் ராணுவம் ஆட்சியைக் கைப்பிடித்தது. ஜனாதிபதியைக் கைது செய்து சிறையிலடைத்தது. 1981இல் ஸபெயினில் தஞ்சம் புகுந்தார் இசபெல். 2007இல் ஸ்பெயின் அரசு இவரை நாடு கடத்த மறுத்துவிட்டது.

அர்ஜென்டினாவில் 1930க்கும் 1976க்கும் இடைப்பட்ட காலப் பகுதியில் ஆறு தடவைகள் ராணுவம் ஜனநாயக ஆட்சியை ஆக்கிரமித்து ஆட்சி செய்தது. 1946-1955, 1973-1976 காலப் பகுதிகளில் மட்டுமே ஜனநாயக ஆட்சி நடைபெற்றது. அர்ஜென்டினா ராணுவத்தின் பின்னால் தொடர்ச்சியாக



முற்றுமுழுதாக ராணுவ அதிகாரிகளை உள்ளடக்கிய நிர்வாகக் குழு அமைக்கப்பட்டு அக்குழு அர்ஜென்டினாவை ஆட்சி செய்தது. இதன் தலைவராகவும் ஜனாதிபதியாகவும் ஜார்ஜ் ரஃபேல் விடேலா பதவியேற்றார். இவருடன் அட்மிரல் எமிலியோ எட்வர்டோ மஸ்ஸெரா, பிரிகேடியர் ஜெனரல் ஆர்லாண்டோ ரமோன் அகோஸ்டி



இணைந்து செயல்பட்டனர்.

1974இலிருந்து 1983 வரை காலப்பகுதியில் அர்ஜென்டினா ராணுவம் மிகவும் கொடூரமான முறையில் ஆட்சி செய்தது. 'ஆபரேசன் காண்டோர்' (Eliminating Marxist Subversion) எனப்படும் ஒழிப்பு முறையை செயல்படுத்தியது. 1975 கார்த்திகை மாதம் இந்த நடவடிக்கை ஆரம்பமானது. இதன் பின்னால் அமெரிக்க அரசு செயல்பட்டது. இடதுசாரி அரசியல்வாதிகளே இந்த நடவடிக்கையின் முதல் பலி. இடதுசாரி அரசியலுக்கு ஆதரவு வழங்கும் பல்கலைக் கழக ஆசிரியர்கள், அறிஞர்கள், பொது மக்கள் என பல தரப்பட்டவர்களையும் இந்த நடவடிக்கை ஒழித்தது, கைது செய்து சித்திரவதை செய்தது. மதகுருமார்கள், மாணவர்கள், விவசாயிகள் என ஒருவரையும் இந்த நடவடிக்கை விட்டுவைக்கவில்லை. 1975-1983 வரையிலான காலப்பகுதியில் 50,000 பேர் கொல்லப்பட்டனர். 30,000 பேர் காணாமல் போயினர், 400,000 பேர் சிறையிலடைக்கப்பட்டனர்.

'ஆபரேசன் காண்டோர்' அர்ஜென்டினாவில் மட்டுமல்லாமல், சிலே, உருகுவே. பரகுவே, பொலிவியா, பிரேசில், பெரு, ஈகுவடோர் போன்ற லத்தீன் அமெரிக்க நாடுகளுடன், மத்திய அமெரிக்க நாடுகளிலும் அமெரிக்க அரசினால் செயல்படுத்தப்பட்டது. இடதுசாரி புத்திஜீவிகள், ஆதரவாளர்கள் ஒழிப்பே இதன் பிரதான நோக்கம். இடதுசாரி சார்பு அரசுகளை தூக்கியெறிந்து, அமெரிக்க சார்பு அரசுகளை ஆட்சியில் இருத்துவதன் மூலம், தொடர்ச்சியான சுரண்டல்களையும் அமெரிக்க செயல்படுத்தி வந்தது. ஜோர்ன்சன், நிக்சன், போர்ட், கார்ட்டர், றீகன் ஆகிய ஜனாதிபதிகளின் ஆட்சிக் காலங்களில், அவர்களது ஆசியுடன் இந்த நடவடிக்கை இடம்பெற்றது.

அர்ஜென்டினாவின் ராணுவ ஆட்சியின் போது Triple A (Argentina Anticommunist Alliance) கொலையணி உருவாக்கப்பட்டது. இதற்கான ஆலோசனைகளை சிலே, உருகுவே, பொலிவிய நாட்டு அமெரிக்க சார்பு அதிகாரிகள் வழங்கினார்கள். ஆல்ஜீரியாவில் பிரென்ச் அரசு செயல்பட்டதுபோல், அர்ஜென்டினா இடதுசாரிகள் மற்றும் ஆதரவாளர்களை ஹெலிகொப்டரில் அல்லது சிறிய விமானத்தில் கடத்தி கடலில் எறிவார்கள். பின்னர் இவர்கள் காணாமல் போனவர்கள் பட்டியலில் இடம்பெறுவார்கள். பிள்ளைகள் கடத்தப்பட்டார்கள், பல பிள்ளைகள், சிறார்கள் வலதுசாரி சார்பு செல்வந்தர்களுக்கு தத்து கொடுக்கப்பட்டார்கள். (இதே போன்ற நடவடிக்கை 1960களில் கனடாவின் முதல் குடிகளின் பிள்கைள், பெற்றோரிடமிருந்து பிரிக்கப்பட்டு தத்து கொடுக்கப்பட்டார்கள். இதனை Sixties Scoop என்பார்கள்.)

1980களின் ஆரம்பத்தில் அர்ஜென்டினாவின் பொருளாதாரம் வீழ்ச்சியடையத் தொடங்கியது. சித்திரை 2ஆம் நாள் 1982இல் போர்க்லன்ட் தீவுக்கான போர் அர்ஜென்டினாவிற்கும் பிரித்தானியா-விற்குமிடையில் நடைபெற்றது. பிரித்தானியா இதில் வெற்றி பெற்றது. போரின் தோல்வி, பொருளாதார தேக்கம் போன்றவை அர்ஜென்டினாவின் ராணுவ கொடுங்கோளாட்சியை முடிவுக்கு கொண்டுவந்தது. நாசிகளை விட மோசமான கொடுங்கோளாட்சி செய்த ராணுவம் ஜனநாயக முறையில் தேர்தல்களை நடத்த ஒப்புக்கொண்டது.

இதனிடையே ராணுவத்தினரால் கடலில், நதிகளில் விமானங்களிலிருந்து தூக்கியெறியப்பட்டு மரணமானவர்களின் உடல்கள் புயல், சூறாவளி போன்ற இயற்கைச் சீற்றங்களால் கரை ஒதுங்கத் தொடங்கின. இதுவும் மக்கள் மத்தியில் குழப்பத்தையும் கோபத்தையும் ஏற்படுத்தியது.

1983இன் இறுதியில் நடைபெற்ற தேர்தலில் ரவுல் ரிக்கார்டோ அல்போன்சின் வெற்றி பெற்று ஜனாதிபதியானார். ராணுவ நிர்வாக குழு கால

அடக்குமுறையில் நடைபெற்ற சட்டமீறல்களுக்கு எதிராகவிசாரணையை மேற்கொள்ள அல்போன்சின் பணித்தார். ராணுவ நீதிமன்றத்திலிருந்து, பின்னர் மக்கள் நீதி மன்றத்துக்கு வழக்கு மாற்றப்பட்டது.

1985இல் அரச ஜூலியோ சீசர் ஸ்ட்ராசெரா-ஆல் அர்ஜென்டினா ராணுவ அடக்குமுறையாளர்களுக்கு எதிராக வழக்கு தொடரப்பட்டது. அரச வழக்கறிஞர் பலவித இன்னல்களையும் சந்தித்தார். பல விதமாக எச்சரிக்கைகள் செய்யப்பட்டன. உயிராபத்தையும் மீறி வழக்கைத் தொடர்ந்தார். தனது உதவியாளர்களாக, அப்பொழுதுதான் சட்டக்கல்லூரியிலிருந்து வெளியே வந்த இளம் சட்டபட்டதாரிகளை அமர்த்தினார். மிகக் குறைவான காலத்தில் ராணுவத்துக்கு எதிராக சாட்சிகளை சட்டத்தின் முன் நிறுத்த வேண்டும். இது ஒன்றும் இலகுவான காரியமல்ல. ஏற்கனவே ராணுவ அடக்குமுறையில் வாழ்ந்த மக்கள், ராணுவம் என்றவுடனே பயந்தனர். இறுதியில் 17 நாட்களில் பாதிக்கப்பட்ட 709 பேரை சட்டத்தின் முன் நிறுத்தினர். உண்மையில் 800 பேர் சாட்சி அளித்ததாக ஊடக கருத்துக்கள் தெரிவிக்கின்றன. அதிலிருந்து தேர்ந்து எடுக்கப்பட்ட சாட்சிகளின் சொற்கள் முக்கியமானவை. கைகளில் விலங்கிடப்பட்ட நிலையில் குழந்தையைப் பெற்றெடுத்து, தனது குழந்தையை அணைக்க முடியாத நிலைமையிலிருந்த பெண்ணின் சாட்சியம் என பலர் சாட்சியளித்தனர்.




இறுதியில் ராணுவ ஆட்சிக் காலத்தின் ஜனாதிபதி-யாகவிருந்த விடேலா-க்கு 17 ஆண்டுகள் சிறைத் தண்டனையும், மற்றொரு கொடுங்கோல் ராணுவ அதிகாரியான அட்மிரல் எமிலியோ எட்வர்டோ மஸ்ஸெரா-க்கு ஆயுள் தண்டனையும் வழங்கப்பட்டது. வேறு சில அதிகாரிகளும் தண்டிக்கப்பட்டார்கள். 1985ஆம் ஆண்டு நடைபெற்ற வழக்கின் பின்னரும் பாதிக்கப்பட்ட பலரும் ராணுவ அதிகாரிகளுக்கு எதிராக வழக்குத் தொடர்ந்தனர்.

1985இல் நடைபெற்ற இந்த வழக்கை மையமாகக் கொண்டு வெளிவந்த படம்தான் 'Argentina 1985'. 'Judgment at Nuremberg', 'JFK' போன்ற படங்களைப் போல் நீதிமன்ற காட்சிகள் நிறைந்தது இப்படம். 2022 ரொரன்ரோ சர்வதேசத் திரைப்படவிழாவில் திரையிடப்பட்ட முக்கியமான படமிது.

திரைக்கதை சுவாரசியமாகவும் சில இடங்களில் நகைச்சுவையாகவும் நகர்கின்றது. ஒரு உண்மை வரலாற்றினை திரையில் பார்ப்பது என்பது அதுவும் நீதிமன்றக் காட்சிகள் நிறைந்த காட்சிகளுடன் பார்ப்பது பார்வையாளனுக்கு சற்று கடினமாகவேயிருக்கும். அதனை திரைக் கதையாசிரியர்கள் மாற்றியுள்ளார்கள். ரிக்கார்டோ டேரின், பீட்டர் லான்சானி ஆகியோர் மிகச் சிறப்பாக நடித்துள்ளார்கள்.

படத்தின் இயக்குனர் சாண்டியாகோ மிட்டர் (Santiago Mitre)-க்கு ராணுவ ஆட்சி முடிவுக்கு வந்த போது மூன்று வயது. அவர் தனது பெற்றோர், உறவினர்கள், ஆசிரியர்கள் மூலம் கேட்டறிந்து ராணுவ ஆட்சியின் கொடூரங்களை உணர்ந்துள்ளார். இறுதியில் அரச வழக்கறிஞர் தனது இறுதி வாதத்தை முன்வைக்கின்றார். அப்பொழுது அவர் கூறும் வார்த்தைகளும் கருத்துக்களும் முக்கியமானவை. ராணுவத்தினரின் நடவடிக்கைகை குறித்து மூன்று வார்த்தைகளை கூறினார். கொடூரமான, இரகசியமான, கோழைத்தனமான செயற்பாடுகள். இவற்றை ராணுவத்தின் அடையாளமாக பதிவு செய்கின்றார்.

ஒருவரை மிகவும் கொடூரமாக துன்புறுத்தி அதனைப் பார்த்து மகிழ்தல் என்பது ஒரு போர் தந்திரமாகவோ, அரசியல் கருத்தியலாகவோ இருக்கமுடியாது. மாறாக ஒரு அறமற்ற வக்கிர மன நோய். இதனையே ராணுவத்தினர் செய்துள்ளனர் என மேலும் அரச வழக்கறிஞர் குறிப்பிட்டார். ராணுவத்தினர் சமூக மனிதர்கள் அல்ல என்பது இயக்குனரின் கருத்து. உண்மையும் அதுவே.

இயக்குனர் இப்படத்தில் ராணுவத்தினரின் கொடுமைகளை விசாரணைக்குறபடுத்திய அர்ஜென்டினா ஜனாதிபதியையோ, அரச வழக்கறிஞரையோ, 17 நாட்களில் 709 பாதிக்கப்-பட்டவர்களை சாட்சிக்கு அழைத்து வந்த இளம் சட்டத்தரணியையோ ஒரு காவியனாக (Hero) காட்டவில்லை. இப் படத்தை மக்களுக்கான ஒரு படிப்பினையாகவே முன்வைத்துள்ளார்.

சரித்திரமல்ல இங்கு முக்கியம். அதனை பதிவு செய்வதும் அவசியம் என்றாலும் இயக்குனர் அதற்கும் முக்கியத்துவமளிக்கவில்லை. கார்ல் மார்க்ஸ் குறிப்பிடுவார், 'வரலாறு மீண்டும் மீண்டும் வருகிறது; முதலில் சோகம், பின்னர் கேலிக்கூத்து.' பல அறிஞர்களும் சரித்திரம் மீள நடைபெறும் என்பார்கள். ஆனால், இயக்குனர், 'ஒரு போதும் வேண்டாம்' (Never Again) என அழுத்தமாகக் கூறுகின்றார்.

**ரதன்** <rathan100@gmail.com>

SRI VEERA'S GROUP

SRI VEERA'S CREATIONS

பல ஜவுளி கடை முதலாளிகளை உருவாக்கும் ஸ்தாபனம்

# ஸ்ரீ வீராஸ் கிரியேஷன்ஸ்

# SRI VEERA'S CREATIONS

(Silks Textiles & Readymade Showroom)

## மொத்த விலை ஷோரூம்

## Wholesale showroom

www.sriveeras.com

www.facebook.com/sriveerascreations

எங்களுக்கு வேறு எங்கும் கிளைகள் இல்லை

**2 Wheeler & Car Parking வசதியுடன்**

எண். 51-52/1, M.C. ரோடு, சென்னை - 600 021.

போன் : 2590 1771, 2590 1772, 2590 1773, 2590 1774

# செவல்குளம் செல்வராசு கவிதைகள்



கோடை

கோடைச் சூரியன் உமிழ்ந்த
ஒட்டுமொத்த வெயிலையும்
வெக்கையாய்க் கீழிறக்கிக் கொண்டிருக்கிறது
ஓட்டு வீடு.
தூங்க முடியாமல்
முதுகு நனைந்து படுத்துக்கிடக்கையில்
எப்படியோ வந்து தொலைத்தது ஆசை.
“கடைசியா பங்குனி உத்திரத்து அன்னைக்கு...
பத்து நாள் ஆச்சு”

மெதுவாகத் தொட்டுத் திருப்பிய விரல்களுக்கு
கிளர்ச்சிவயப்பட்டு
மெதுவாக மேலேறிப் படர்ந்தபோது
‘சொத்தென’ முதுகில் விழுந்தது ஏதோவொன்று.
பதறியபடி உதறி எழுந்து பார்த்தபோது
‘சின்னவ’ தலைமாட்டில் கிடந்தது
செந்தேள்க் குஞ்சொன்று.

‘பெரியவ’ எழுந்து “அம்மா தண்ணீ” ன்னா
தேள் எடுத்துப் போட்டு
நீர் எடுத்துக் கொடுத்து
பாய் திரும்பி
விட்டம் பார்த்துக் கிடந்தோம்
ரகசியமாய்ப் புன்னகைத்தாள்
வெக்கையும் வேட்கையும்
விரக்தியும் ஏமாற்றமும் கசிய.

மொத்தமாய்க் கலைந்துவிட்டது
இனி மேகங் கூட எத்தனை நாளாகுமோ?
இந்தக் கொடுங் கோடையில்.

வெக்கை

கனவில் குத்திய திருகாணியை
கையால் தடவுகிறேன்
படுக்கை நனைந்து கிடந்த ஈரத்தில் கண்விழித்து
தலைமாடு கால்மாடாய்க் கிடந்துறங்கும்
பிள்ளைகளை நேராக்கி
காற்று போதாமல்
தொடை தெரியக் கிடக்கும்
தலைவியின் பக்கம் வந்து படுக்கிறேன்

சரிந்துகிடக்கும் மாரில் கிளர்ச்சியுற்று
கால் தூக்கிப் போட்டதும்
பதறி விழித்து
சூழல் உணர்ந்தபின் சொன்னாள்
கனவில் ஏதோ குத்தியது போல் இருந்ததென்று...

அறையின் வடகிழக்கு மூலை சுவரில்
அருகில் நிற்கும் இரையைப் பொருட்படுத்தாமல்
இரண்டு கனத்த பல்லிகள்
வாலோடு வால் முறுக்கி லயித்துக் கிடக்கின்றன
ஒன்றோடொன்று அணைத்து...

**செவல்குளம் செல்வராசு**
<sevalkulamselvarasu@gmail.com>

# காசி தமிழ் சங்கமம்
# மாலனோடு ஒரு யாத்திரை

**ராஜ்ஜா**

நவம்பர் 13, 2022. காலை பத்தரை மணி. ஞாயிற்றுக்கிழமை. என் மூத்த மகன் வயிற்றுப் பேரன் ரமணன் ஓடி வந்து, "தாத்தா! இந்தா உன்னோட மொபைல். இத்தோடு மூனு தடவை அடிச்சுடுச்சி," என்று என்னிடம் கொடுத்து விட்டு தன் நண்பனோடு விளையாட ஓடிவிட்டான். யார் தொடர்ந்து மூன்று முறை அழைத்திருப்பார் என்று நான் யோசனையில் மூழ்கிப் போனேன். அந்த சமயம் 'டொடொய்ங்' என்ற சத்தத்தோடு ஒரு குறுஞ்செய்தி வந்துவிழுந்தது.'வணக்கம். நான் உங்களோடு உடனே பேச வேண்டும் - சுதா சேஷய்யன்' என்ற செய்தி!

நான் டாக்டர் சுதா சேஷய்யனின் கைபேசியை ஒலிக்க வைத்தேன். "அப்பாடா! கிடைத்தீர்களா?" என்ற முகத்துதியோடு ஆரம்பித்தார்."வாரணாசியில் நடக்கவிருக்கும் இலக்கிய நிகழ்ச்சிக்கு உங்களை சிறப்பு விருந்தினராக அழைத்துச் செல்ல இருக்கிறோம். பொதுத் தலைப்பு 'காசியில் பாரதி.' நீங்கள் 'காசியிலிந்து புதுச்சேரி வரை' என்ற தலைப்பில் உரையாற்றலாம். அதே மேடையில் மாலனும் உரையாற்றுகிறார். அவரிடம் இருந்துதான் உங்கள் மொபைல் எண் கிடைத்தது. என்ன சம்மதமா?" எனக்கோ மேகத்தின் மேல் அமர்ந்து செல்வதைப் போன்ற உணர்வு.

"சந்தோஷம். மீண்டும் அழைக்கிறேன்," என்று சொல்லி என்னை ஆவலோடு காத்திருக்க வைத்துவிட்டார். மீண்டும் அழைத்தார், இரு தினங்கள் கழித்து. "உங்கள் வயது என்ன சார்?" என்று கேட்டார். "என் வயதைத் தெரிந்துகொண்டு நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று சிரித்துக்கொண்டே கேட்டேன்."சொல்லுங்கள்.வாரணாசிக்கு ஃபிளைட் டிக்கெட் எடுக்க வேண்டுமே," என்று அவர் சொல்லியதுமே, "மேடம்! எனக்கொன்று என் மனைவிக்கு ஒன்று. என் மனைவிக்கு ஆகும் டிக்கெட் செலவை நான் ஏற்றுக்கொள்கிறேன்," என்று நான் பவ்வியமாகச் சொன்னதுமே,



"சரி! வயதைச் சொல்லுங்கள்" என்றார். "எங்கள் இருவருக்குமே எழுபது வயதுதான்," என்றேன். "உங்கள் மனைவியின் பெயர்?" "பெரியநாயகி." "நல்ல ஹஸ்பண்ட் சார் நீங்க," என்று சொல்லி பேச்சை முடித்துக்கொண்டார்.

நவம்பர் 15, 2022 அன்று மின்னஞ்சல் ஒன்று அனுப்பியவர் இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜி, சென்னை நிறுவனத்தின் இயக்குநர் பேராசிரியர் காமகோடி. அதில் வாரணாசியில் நடக்க இருக்கும் 'காசி தமிழ் சங்கமம்' (நவம்பர் 16 முதல் டிசம்பர் 19 வரை) நிகழ்ச்சியில் கலந்துகொள்ள நான் சம்மதம் தெரிவித்ததற்கு உணர்வு பூர்வமான நன்றியை தெரிவிப்பதாகவும், நவம்பர் 24 அன்று நடக்க இருக்கும் இலக்கிய விழாவில் கலந்துகொண்டு உரையாற்ற வேண்டும் என்றும், 23-ந் தேதியே வாரணாசி செல்வதற்கான விமானப் பயணச்சீட்டை, எனக்கும் என் மனைவிக்கும் சேர்த்து விரைவில் அனுப்பிவைப்பதாகவும் குறிப்பிட்டிருந்தார்.

காகிதத்தில் உருமாற்றம் பெற்ற மின்னஞ்சலை என் மனைவியிடம் காட்டினேன். அவருக்கு வாயெல்லாம் பல்லானது. "அதானே! நீங்களாவது என்னெ காசிக்கு அழைச்சுக்கிட்டுப் போறதாவது? எல்லாம் காசி விஸ்வநாத சுவாமியின் கிருபைதான்... வயசான காலத்துல காசிக்கு சாகப் போவாங்கன்னு சொல்லுவாங்க. நீங்க என்னடான்னா, காசியில பேசப் போறேன்னு சொல்றீங்க" என்றார்.

மகாகவி பாரதியை நான் நன்றிப் பெருக்கோடு நினைத்துக்கொண்டேன். இந்த மாமனிதர்தான் என்னை எங்கெங்கெல்லாம் கொண்டு போய் சேர்த்திருக்கிறார்! சேர்க்கிறார். அப்படி நான் அந்த மகாகவிக்கு என்ன செய்துவிட்டேன்? விரல்விட்டு எண்ணிவிடலாம்.

பாரதியின் வசன கவிதைகள் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்தேன். அவரது சிறுகதைகள்,



மீரா, பிரீத்தியூஷ் வரவேற்பு

ஏறக்குறைய எல்லாவற்றையுமே, ஆங்கிலத்திற்கு கொண்டு சென்றிருக்கிறேன். அவரது பத்தாண்டு கால புதுச்சேரி வாழ்க்கையைப் பற்றி பல கட்டுரைகள், அரவிந்தரோடு அவர் கொண்டிருந்த நட்பு பற்றி சில கட்டுரைகள் - எல்லாம் ஆங்கிலத்தில் தான். நான் செய்த இந்த அணில் உதவிக்கா பாரதியும் அரவிந்தரும் போட்டி போட்டுக்கொண்டு என்னை பல சிம்மாசனங்களில் உட்கார வைத்து அழகு பார்க்கிறார்கள்! என்ன உலகமடா இது?

நான் மொழிபெயர்த்த பாரதியின் பல கதைகள் இந்தியன் எக்ஸ்பிரஸ் ஞாயிறு நாளேட்டில் தொடர்ந்து வெளியானதைப் பார்த்துவிட்டு கலைஞர் அவர் எழுதிய சிறுகதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார். இப்போதோ வாரணாசிக்கு. எல்லாம் பாரதியால்தான்.

வாரணாசி, பனாரஸ் இந்து பல்கலைக்கழகம், எனக்கும் என் மனைவிக்கும் சேர்த்து விமானப் பயண ரசீதினை மின்னஞ்சலில் சரியாக ஒரு வாரத்திற்கு முன்னரே அனுப்பிவிட்டது. புறப்படும் நாள் 23-11-2022. மீண்டும் திரும்பும் நாள் 26-11-2022 என்று குறிப்பிடப்பட்டிருந்தது. இந்தியப் பல்கலைக் கழகங்கள் விமானச் சீட்டு அனுப்புகையில், அதைப் பெறுபவர் எங்கே தங்கவைக்கப்படுவார், அவரது நிகழ்ச்சிகளுக்கான அட்டவணை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்தே அனுப்புவது வழக்கம். வாரணாசி பல்கலைக் கழகமோ எல்லாவற்றிலும் மௌனம் காத்தது, கடைசிவரை சற்று உதறலாகவே இருந்தது.

இது சம்பந்தமாக மாலனை தொடர்பு-கொண்டேன். அவரோ, "எனக்கும் ஒன்றும் தெரிய-வில்லை ராஜா. தெரிந்தால் நிச்சயம் சொல்கிறேன்," என்றார். 22-ந் தேதி இரவு வரை இதே நிலைதான். 'என்னடா இது? எங்கே போகப்போகிறோம் என்பது மட்டும் தெரிகிறது. எங்கே தங்கப் போகிறோம் என்பது தெரியவில்லை. மரணத்திற்குப் பின் வாழ்வு என்கிறார்களே, அது போலத்தானோ இதுவும்! போகும் இடம் வேறு காசி. சரி! சுதா சேஷய்யனிடமே கேட்டு விடுவோம் என்ற எண்ணம் மேலிடவே அவருக்கு அழைப்பு விடுத்தேன். ஏதோ என் அழைப்பு மணிக்காக காத்திருந்தவர் போல் உடனே எடுத்து, "ஹலோ சார், உங்களுக்கு கால் பண்ணனும்னுதான் மொபைலை எடுத்தேன். நீங்களே லைனில் வந்துட்டீங்க. முதல்லெ நான் சொல்ல வேண்டியதெ சொல்லி முடிச்சுடறேன். அப்புறம் நீங்க சொல்லுங்க," என்றார்.

நான்தான் ஞாபக மறதி பேராசிரியர், சுதா சேஷய்யன் ஞாபக மறதி துணைவேந்தர் போல. நான் சொல்லவந்தது எனக்கு மறந்து போகாமல் இருக்கவேண்டுமே.

"மாலனும் நீங்களும் கலந்துகொள்ள வேண்டிய நிகழ்ச்சி ஒரு நாள் தள்ளிப்போகிறது. 24-ந் தேதிக்கு பதில் 25-ம் தேதி. உங்க ஊர் கவர்னர் தமிழிசை அன்றுதான் வாரணாசியில் இருப்பார். அதுதான் செய்தி. மற்றபடி நீங்கள் செல்ல வேண்டிய தேதியில் செல்லலாம். வரவேண்டிய தேதியில் வரலாம். ஊரைச் சுற்றிக் காண்பிக்க சகல ஏற்பாடுகளும், செய்யப்பட்டிருக்கின்றன. இப்போது நீங்கள் சொல்ல

வந்ததைச் சொல்லுங்கள்," என்றார்.

"அது ஒன்றும் இல்லை மேடம். நான் சொல்ல வந்தது என்னன்னா, எங்களை எங்க தங்க வைக்கப் போறாங்கன்னு தெரிஞ்சிக்கிறதுக்குத்தான்." என்று இழுத்தேன்.

"அதெல்லாம் உங்க யாருக்கும் எந்த கவலையும் வேணாம். வாரணாசியிலெ இறங்குங்க. அப்புறம் நடக்க வேண்டியதெல்லாம் நல்லாவே நடக்கும். ஹேப்பி ஜர்னி," என்று சொல்லி முடித்துக்கொண்டார்.

என் மனைவியிடம் சொன்னேன். "எல்லாம் விதிப்படிதான். அந்த கடவுள் மேல பாரத்தை போட்டுட்டு போய் தூங்குவோம். அதிகாலையிலெ எழுந்திருக்கணுமில்ல," என்று சொன்னார்.

விமானப் படிக்கட்டில் ஏறும் போது, "வாரணாசிக்கு முன்னமேயே போய் இருக்கிறீர்களா?" என்றார் மாலன்.

"பனாரஸ் இந்து பல்கலைக் கழகத்திற்கு செல்வது இதுவே முதல் தடவை," என்று நான் சொல்ல, "இல்லை சார், காசிக்கு செல்வது இதுவே முதல் தடவை," என்று என் மனைவி சொல்ல நான் தலையை சொரிந்து விட்டுக்கொண்டேன். எந்தப் பொருளும் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அர்த்தத்தை கொடுக்க வல்லதுதானோ!

விமானத்தில் ஏறி உட்கார்ந்தாகிவிட்டது. விமானமும் விண்நோக்கி உயர்ந்தது. சிறிது நேரத்தில் விமானப் பணிப்பெண் ஒருவர், ஒரு பெட்டி வண்டியில் திண்பண்டங்களையும் பானங்களையும் அழகாக அடுக்கி வைத்துக் கொண்டு உருட்டிக் கொண்டுவந்தார்.

எங்கள் வரிசைக்கு வந்தவர், என்ன வேண்டும் என்று கேட்டார்.

"என்ன இருக்கிறது?"

"'சிக்கன் நூடுல்ஸ், சிக்கன் பிரைடு ரைஸ், வெஜ் நூடுல்ஸ், உப்புமா."

"எனக்கு ஒரு சிக்கன் நூடுல்ஸ் போதும். உனக்கு என்ன வேண்டுமா நீ கேட்டு வாங்கிக் கொள்," என்று என் மனைவியிடம் சொன்னேன்.

என் மனைவி என்னைப் பார்த்து ஒரு முறை முறைத்துவிட்டு, "ஏங்க! கோயிலுக்குத்தானே போறோம். இப்போ என்ன சிக்கன், மட்டன்னு சொல்லிக்கிட்டு?" என்றார்.

"இல்லெ...நம்ம பெனாரஸ் இந்து பல்கலைக்கழகத்துக்குத் தானே போறோம்."

"அதுவும் காசியிலதானே இருக்கு."

நாங்கள் இருவரும் ஊடலில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்த பணிப்பெண், ஆளுக்கொரு வெஜ் நூடுல்ஸையும் மாதுளம் பழ ரசத்தையும் எடுத்துக் கொடுத்துவிட்டு அடுத்த வரிசைக்கு நகர்ந்தார்.

எங்களுக்கு முன் வரிசையில் இருந்த மாலன் என்ன சாப்பிடுகிறார் என்று எட்டிப் பார்ததேன். உப்புமா. அது ஒன்றும் அவ்வளவாக நன்றாய் இல்லை என்பதை அவர் முகம் சொன்னது. வெஜ் நூடுல்ஸ் பரவாயில்லை. பசிக்கு ஏதோ ஒன்று.

லால் பகதூர் சாஸ்திரி சர்வதேச விமான நிலையம். பறந்து வந்த விமானம் தரை இறங்கியது. எதிர்பார்த்ததை விட பிரமாதமான விமான நிலையம். பயணப் பைகள் எங்களை வந்து சேருவதற்குள் எனக்கும் மாலனுக்கு அழைப்பு மணி வந்துகொண்டே இருந்தது... நிமிடத்திற்கு நிமிடம். "வெளியே வந்துவிட்டீர்களா?" என்று கேட்டபடி.

ஒரு வழியாக வெளியே வந்து சேர்ந்தோம். ஒரு மாணவப் பட்டாளமே எங்களுக்காக இரண்டு பெரிய கார்களை நிறுத்திக்கொண்டு காத்துக்கொண்டிருந்தது. எல்லாம் ஆங்கிலம் அறிந்த இந்திக்காரர்கள்தான். "பனாரஸ் இந்து பல்கலைக்கழகம் உங்கள் மூவரையும் அன்போடு வாரணாசிக்குள் வரவேற்கிறது. எங்கள் அன்பும் ஆதரவும் நீங்கள் திரும்பிச் செல்லும் வரை இருக்கும்," என்று அழகான ஆங்கிலத்தில் சொன்னார்கள். அவர்கள் காட்டிய பாசம், நேசம் அளப்பரியது. எழுத்தாளர்களுக்கு பனாரஸ் இந்து பல்கலைக்கழகம் கொடுக்கும் மரியாதை.

மாலனுக்கு ஒரு கார். ராஜ்ஜாவுக்கு ஒரு கார், என்று அவர்கள் சொன்னதுமே, "எங்களை எங்கே அழைத்துப் போகப்போகிறீர்கள்?" என்று நான் கேட்டேன். "லஷ்மண் தாஸ் கெஸ்ட் ஹவுஸ். பல்கலைக்கழக வளாகத்திலேயே உள்ள பிரமாண்டமான தங்குமிடம்," என்று பதில் வந்தது.

"நாங்கள் இருவருமே ஒரே கெஸ்ட் ஹவுஸ் என்றால், ஏன் எங்களுக்கு இவ்வளவு பெரிய ரெண்டு கார்கள்? ஒரே காரிலேயே சென்று விடலாமே," என்று மாலன் சொல்ல, வந்திருந்த விழாக் குழுவினருக்கு நியாயமாய்ப்பட, ஒரே காரில் ஏறிக்கொண்டோம். எங்களுக்கு பாதுகாவலர்களாக ஒரு மாணவர் - பிரித்யூஷ் வர்மா, பல்கலைக்கழகத்தில் பிரெஞ்சு மொழியை தலையாய பாடமாக எடுத்து படிப்பவர், ஒரு மாணவி - மீரா மிஸ்ரா, உலக அரசியலை தலையாய பாடமாக பயில்பவர்.

பிரித்தியூஷ்ம் சரி, மீராவும் சரி... இருவருமே வாரணாசி விமான நிலையத்தில் நாங்கள் இறங்கிய திலிருந்து, மீண்டும் அதே நிலையத்திற்கு ஊர்



'எ டிரஷெரி ஆஃப் என்ஷியன்ட் தமிழ் லெஜண்ட்ஸ்' ஆங்கில நூலை வெளியிடும் புதுச்சேரி ஆளுநர் தமிழிசை

திரும்ப வரும்வரை, எங்களை தங்கள் தாய் - தந்தையரையாகவே பாவித்தனர். ஒவ்வொரு நாளும் காலையிலிருந்து இரவு வரை, அதாவது தூங்கச் செல்லும் நேரம் வரை எங்களுடனே ஒட்டிக் கொண்டிருந்தார்கள்.

பிரித்தியூஷ், பீகார் மாநிலத்தைச் சேர்ந்தவர். மீரா - வாரணாசி, மண்ணின் புதல்வி. இருவருக்குமே வாரணாசி பல்கலைக்கழகத்தின் உள்ளேயும் வெளியேயும் ஒவ்வொரு மூலை முடுக்கும் அத்துப்படி. எங்களை ஊர் சுற்றிக் காண்பிக்கும் போது கார் டிரைவர்களுக்கே இவர்கள்தான் வழிகாட்டினார்கள். ஆங்கிலமும் இந்தியும் இருவருமே சரளமாகப் பேசினர். எனவே, எங்களுக்கு மொழிப் பிரச்சினை ஏதும் இல்லாமல் போனது.

காரில் ஏறி உட்கார்ந்ததுமே, மீரா சொன்னார்: "சார், பல்கலைக்கழகம் செல்ல ரெண்டு வழிகள். ஒன்று குறுக்கு வழி. இதைப் பிடித்தால் ஒரு நாற்பது நிமிஷத்தில் போய் சேர்ந்துவிடலாம். இந்த வழி கிராமங்களின் வழியே போகும். நேர்வழியோ நகரத்தினுள் நுழைந்துதான் போக முடியும். இரண்டு மணி நேரத்திற்கு மேலாகும். எல்லாம் போக்குவரத்தைப் பொருத்தது."

"எங்களை நகரத்தின் வழியே அழைத்துச் செல்லுங்கள் நாங்கள் ஊரைச் சுற்றிப் பார்க்க வேண்டாமா?" என்று மாலன் சொல்ல, "அப்படியே ஆகட்டும்" என்று டிரைவருக்கு வழிகாட்டினார் மீரா.

நான் அடிக்கடி என் நண்பர்களிடம் சொன்ன-துண்டு, "புதுச்சேரியில் வண்டி ஓட்டிப் பழகிவிட்டால்,உலகத்தில்எங்கேவேண்டுமென்றாலும் ஓட்டலாம்" என்று. வாரணாசியின் அந்த இரண்டரை மணி நேரப் பயணத்தில் நான் சொன்ன சொற்களை தண்ணீரை விழுங்குவதைப் போல விழுங்கிவிட்டேன். வாரணாசி வாகன ஓட்டிகள் - புதுச்சேரி வாகன ஓட்டிகளைவிட ரெண்டு மூனு படிகள் உயர்ந்தே இருக்கிறார்கள். இவர்களது வாகனங்களை இவர்கள்தான் ஓட்டுகின்றார்களா அல்லது இவர்களுக்காக காசி விஸ்வநாதரே ஓட்டிச் செல்கிறாரா என்பது எனக்கு புரியாத புதிராகவே இருக்கிறது.

எங்கள் காருக்கு முன்னால் ஒரு சைக்கிள் ரிக்ஷாக்காரர் ஆமை வேகத்தில், எதைப் பற்றியும் கவலைப்படாமல். அவர் எப்போது நகர்ந்து வழி விடுவார் என்ற எண்ணத்திலேயே எங்கள் கார் டிரைவர், பிரேக்கிலிருந்து காலை எடுக்காமலேயே. ரிக்ஷாக்காரர் ஏதோ கொஞ்சம் நகர்ந்து இடம்விட, கார் டிரைவர் அவரை முந்திச் செல்ல முயற்சிக்கிறார். அந்த சமயம் பார்த்து வலது பக்கத்தில் இருந்து ஒரு சைக்கிள், இடது பக்கத்தில் இருந்து ஒரு ஸ்கூட்டர் எதிரும் புதிருமாக வந்து ஒன்றை ஒன்று முந்தப் பார்க்கின்றன. அவர்களும் அந்த நேரத்திற்காக காத்திருந்திருப்பார்களோ. வேறு எந்த ஊராக இருந்தாலும் அங்கு விபத்தாகி, செய்தித்தாள்களுக்கு நிறைய தீனி கிடைத்திருக்கும். ஆனால், அங்கு எதிர்பாராதது எதுவும் நடக்கவில்லை. யாரும் யாரையும் பார்த்து சலித்துக் கொள்ளவில்லை. அகராதி ஏறாத வார்த்தைகளை பிரயோகிக்கவில்லை. ஒருவருக்கொருவர் சட்டையை பிடித்துக் கொள்ள-வில்லை. எல்லாம் விநோதய சித்தம் என்றெண்ணி

போய்க் கொண்டே இருக்கிறார்கள்.

வாரணாசியில் இருந்த நான்கு நாட்களில் ஒரு தெருச் சண்டையையோ, விபத்தையோ, அய்யோ அய்யோ என்று அலறி அடித்துக்கொண்டு செல்லும் ஆம்புலன்ஸையே பார்க்க முடியவில்லை. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறுதானே பதம்.

மக்கள் தொகை அதிகம் கொண்ட இடம்தான் வாரணாசி என்கிற காசி. சராசரியாக ஒவ்வொரு நாளும் ஏழரை லட்சம் பேர் யாத்திரிகர்களாக இங்கு வருகின்றனர் என்று பின்னர் தெரிந்துகொண்டேன்.

ஆயிரத்து முன்னூற்று எழுபது ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள பனாரஸ் இந்து பல்கலைக்கழகத்தினுள் நுழையும் போது மணி மாலை ஐந்து. எங்கு பார்த்தாலும் வரவேற்புப் பலகைகள். காசி தமிழ் சங்கமம் உங்களை வரவேற்கிறது என்பதை தமிழ், இந்தி, ஆங்கில மொழிகளில் எழுதியிருந்தார்கள்.

லஷ்மண் தாஸ் விருந்தினர் மாளிகையில், நான்காம் தளத்தில் அறை எண் 507 மாலனுக்கும் 509 எனக்கும் என் மனைவிக்கும் ஒதுக்கப்பட்டிருந்தன. ஒரு பெரிய கூட்டுக் குடும்பமே சௌகரியமாக இருக்கலாம். எல்லா வித வசதிகளையும் கொண்டவை. ஏ.சி.யையும் சரி, ஃபேனையும் சரி -எதையும் நாங்கள் உபயோகிக்கவில்லை. விசாலமான பின்புற ஜன்னல்களை திறந்தாலோ, உடம்பெல்லாம் நடுங்க ஆரம்பித்தது. அவ்வளவு குளிர். அப்போது மாட்டிய கம்பளி ஆடைகள். மறுநாள் காலை குளிக்கச் செல்லும் வரை உடம்பை ஒட்டியே இருந்தன.

எங்களை எங்கள் அறைகளில் விட்டுச் சென்ற மீராவும் பிரத்தியூஷும் மறுபடி ஆறரை மணிக்கு வந்து சேர்ந்தார்கள். “கங்கை நதியை தரிசித்து வரலாம் வாங்கள்” என்றார்கள்.

தரைத்தளத்தில் எங்களுக்காக பெரியதொரு கார் நின்றது. “ரொம்ப தூரமோ?” என்றார் மாலன். “இல்லை மிக அருகில்தான்,” என்றார் பிரத்தியூஷ். “அப்புறம் என்ன? நடந்தே போகலாமே!” என்றேன் நான். “இல்லை... இல்லை... உங்களை எங்கும் நடத்தி அழைத்து செல்லக்கூடாது என்பது உத்தரவு,” என்றார் மீரா. என் மனைவி பெரியநாயகியோ என்னைப் பார்த்து ஒரு மௌனப் புன்னகையை உதிர்த்தாள். “உன் காட்டில் மழை,” என்று அதற்கு அர்த்தம். “உன் கடும் உழைப்பிற்கு கிடைத்த பலன்,” என்றும் பொருள் கொள்ளலாம்.

கங்கைக் கரையின் படித்துறையில் கும்பமேளா. எங்கெங்கிருந்தோ மக்கள் வெள்ளமென திரளுவது கங்கை நதியின் தரிசனம் காணத்தானே. “ஏன் இந்த தரிசனம் பகலில் கிட்டாதா?” என நான் கேட்க, மாலனோ, “கிட்டாது. இரவு வேளை கார்த்திகை மாதம் கங்கை நதி தரிசனம் காண ஆயிரம் கண்கள் போதாது,” என்றார்.

எங்களுக்கென்று தனியொரு விசைப்படகு ஏற்பாடாகி இருந்தது. அதை செலுத்துபவர் ஒருவர். எங்கள் ஐவருக்கும் பாதுகாவலர் ஒருவர். விசைப்படகு நதியை கிழித்துச் செல்ல, என் காதுகளில் “கங்கை நதிப் புறத்து கோதுமைப்பண்டம், காவிரி வெற்றிலைக்கு மாறுகொள்வோம்,” என்ற ‘ஏக் பாரத்’ வரிகள் எங்கிருந்தோ என் காதுகளுக்கு மட்டும் கேட்டன. மாலனின் மனதிலும் ஓடியிருக்கும். என்னைப்போன்றே அவரும் பாரதி பக்தர் அல்லவா!

படகு மெதுவாகவே செல்லச் செல்ல, ‘காட்’ என்று அழைக்கப்படும் கட்டடங்கள் எண்பத்து எட்டையும் காண முடிந்தது. ஒவ்வொரு கட்டடத்திலும் ஐந்து பூசாரிகள், கண்ணைப் பரிக்கும் மின் ஒளி விளக்குகளின் கீழ் நின்று கங்கை அன்னைக்கு தீபாராதனை செய்ய, மேளதாளங்கள் காதுகளை கிழிக்கும் அளவிற்கு போக, எங்களுக்கோ காது கொள்ளா, கண் கொள்ளா காட்சி. நம்ம ஊர் பூசாரிகள் மேல் சட்டை போடாமல். அவர்கள் அங்கி போன்ற உடை அணிந்தபடி. குளிரும் காரணமாக இருக்கலாம். இங்கே டும்... டும்... டும்... மேளம். அங்கே டர்... டரு... டரு மேளம். அதிக வித்தியாசம் ஏதுமில்லை. இதைத்தான் ‘கங்கா ஆர்த்தி’ என்கிறார்கள்.

நறுமணப் புகையும் மலர்களின் வாசமும் நம் மூக்கைத் துளைக்க, எங்கிருந்தோ எரியும் பிணவாடையும் சேர்ந்துகொள்கிறதே. ‘தசாஸ்வமேகா காட்’ என்று நினைக்கிறேன். அங்கே பூஜையும் புணஸ்கரணங்களும் நடக்க, அதன் பக்கத்தில் இருக்கும் மணிகர்னிகா கட்டடத்தில் மூன்று பிணங்கள் பக்கத்தில் பக்கத்தில் சுடர் விட்டு எரிந்து கொண்டிருந்ததைப் பார்த்த எனக்கு, எங்கள் ஊர் கருவடிகுப்பம் சுடுகாட்டின் வாசல் அருகில் எழுதப்பட்டிருக்கும் வாசகம் - ‘இன்று இவர், நாளை நீங்கள்” ஞாபகத்திற்கு வந்தது.

ஆராதனை மிகவும் கோலாகலமாக நடந்து கொண்டிருந்த கட்டடத்தின் மிக அருகில் படகினை செலுத்தி கால் மணி நேரமாவது தரிசனம் காண வைத்தார் படகோட்டி. மாலன் சிறந்த பக்திமான். என் மனைவியோ கோயில் பூசாரிக்கும் ஒரு படி மேலே. நானோ ‘எங்கெங்கு காணினும் சக்தியடா’ என்ற கொள்கை கொண்டவன். பல கட்டடங்களின் தரிசனம் கண்டு, அஸ்ஸி கட்டடத்தை மீண்டும் அடைந்த போது மணி எட்டரையைத் தாண்டியிருந்தது.

எங்கெங்கோ தோணியிலும் படகிலும் பிரயாணம் செய்திருந்தாலும், கங்கை அன்னையின் மடியில் ரெண்டு மணி நேரத்திற்கும் மேலாக அமர்ந்திருந்தது பிரமிப்பாகத்தான் இருந்தது.

விருந்தினர் மாளிகையினுள் நுழைய மீண்டும்


பனாரஸ் பல்கலைக்கழகம், தமிழ்த் துறை

ஒரு அரை மணிநேரம். கார் ஓட்டுனர் பாவம் என்னதான் செய்வார், மக்கள் வெள்ளம் நேரம் காலம் பாராது தெருவில் ஓடினால்!

விருந்தினர் மாளிகையின் உணவகம் எங்களுக்காக விசேஷமாக காத்திருந்தது. சப்பாத்தி தஹி (தயிர்). சப்பாத்தியை பிட்டு பிட்டு தஹியில் துவைத்து துவைத்து சாப்பிடலாம், எவ்வளவு வேண்டுமானாலும். கஷ்டகாலமடா சாமி!

பெரியநாயகியின் முகத்தில் மகிழ்ச்சியோ மகிழ்ச்சி. "தினமும் மீன் குழம்பு வேண்டும், கறிக் குழம்பு வேண்டும் என்பாயே! ஊர் போய் சேரும் வரை மரக்கறி தான். வேறவழி," என்று நினைத்ததில் ஒரு வகை மகிழ்ச்சி. "காசி போக வேண்டும்... காசி போக வேண்டும், என்று நினைத்தே பல காலங்கள் கழிந்தாலும், இப்போது பல்கலைக்கழகத்தின் செலவிலேயே வந்துவிட்டோமே," என்று நினைத்ததில் மட்டற்ற மகிழ்ச்சி. இவ்வகையான மகிழ்ச்சி வெள்ளம் கரை புரண்டு ஓட தூக்கணாம் பாக்கம் எங்களை இருகரம் தழுவி அரவணைத்துக் கொண்டது.

சொன்னபடியே மீராவும் பிரத்தியூஷீம் மறுநாள் காலை ஏழு மணிக்கெல்லாம் ஆஜர். நாங்களும் தயாராகத்தான் இருந்தோம். அதிகாலையில் காசி விஸ்வநாதரையும் அன்னபூர்ணா தேவியையும் தரிசிக்கவேண்டும் என்பது எழுதப்பட்ட விதி.

கார் பறந்தது. அந்த அதிகாலை வேளையில் காசி தெருக்கள் மக்களை தரிசித்தன. கார் நின்றது. அதற்கு மேல் கார் போக அனுமதி இல்லை. காசி விஸ்வநாதர் கோயில் தெரு. நடந்து செல்ல செல்ல மனமோ பூபாள ராகம் இசைத்தது. இரு பக்கங்களிலும் கடைகள்தான். பலருக்கு இங்கு ஜீவாதாரமே வியாபாரம்தானோ.

திடீரென்று ஒரு சந்து வந்தது. கோயில் வந்துவிட்டது என்றனர். தமிழ்நாட்டில் பெரிய்ய பெரிய்ய கோயில்களாக பார்த்த கண்களுக்கு, சந்தினில் கோயில் இருப்பதை ஏற்க மறுத்தது. 'மூர்த்தி சிறுசாக இருந்தாலும் கீர்த்தி பெரிசு போல' என்றது மனம்.

சந்து சந்தாக போய்க் கொண்டிருந்தோம். மாலன் மட்டும் ஒவ்வொரு சந்தினில் நுழையும் போதும், தனது இருகைகளை இரு புரங்களிலும் நீட்டி இரு சுவர்களையும் ஒரே சமயத்தில் தொட்டு, "படித்திருக்கிறேன். அவ்வளவு குறுகிய சந்துகள் என்று. நேரில் பார்க்கிறேன்," என்றார்.

சந்து பொந்தெல்லாம் சென்று, பின்னர் ஒரு இருபது நிமிடங்களுக்குப் பிறகு காசி விஸ்வநாதர் அருள்பாலிக்கும் இடம் வந்தது. பக்திமான்கள் தங்கள் வீடுகளில் கோயில் வைத்திருப்பார்களே, அதுகூட சற்று பெரியதாய் இருக்கும். அதுவும் இவரை நேருக்கு நேர் சந்திக்க முடியாது. குனிந்துதான் பார்க்க வேண்டும்.

மலர்க்குவியல்களுக்கு மத்தியிலே சற்றே தலை நீட்டிப் பார்க்கும் சிவலிங்கம் அவர். ருத்திராபிஷேகம் செய்ய வேண்டும் என்று மூன்று டிக்கெட்டுகளை எடுத்தார் மாலன். வேறு வழி இல்லாமல் நானும் உட்கார்ந்து பூசாரி செய்யச் சொன்னதையெல்லாம் செய்ய வேண்டியதாய்ப் போயிற்று. மூன்று சிவலிங்கத்தின் தலையிலேயும் அத்தர், பன்னீர், ஜவ்வாது, சந்தனம் போன்றவற்றை பூசாரியிடம் கை நிறைய வாங்கிப் பூசியபின் (இது சுமார் ஒரு கால் மணிநேரம் என்று வைத்துக் கொள்ளுங்களேன்), பூசாரி எங்கள் நெற்றி முழுக்க சந்தனம் பூசி சிகப்புப் பொட்டிட்டு வழியனுப்பி வைத்தார். பூசாரி அதுவரை அங்கு சேர்ந்த பூமாலைகளை பல திசைகளில் தூக்கி வீசினார். பலர் அவற்றை 'கேட்ச்' பிடிக்க, ஒன்று மட்டும் பெரியநாயகியின் கழுத்தில் வந்து மாட்டியது. "இது பெரும் பாக்கியம் அம்மா," என்றார் மாலன். பெரியநாயகியின் மகிழ்ச்சிக்கு எல்லை இல்லாமல் போனது. ஜெய் காசி விஸ்வநாத்.

அன்னபூர்ணா தேவி அழைப்பு விடுத்தார். அழைப்பில்லாமல் எந்த கடவுளையும், பார்க்க முடியாதே. அன்னையை தரிசித்து விட்டு வெளியே வந்தால், கங்கை நதி அழைத்தது. இரவில் தானே என்னைப் பார்த்தாய், பகலில் வந்து பாரேன் என்று சொல்வதைப் போல இருந்தது.

நதி நோக்கி நடந்தோம். ஏதோ கிரேக்க ஆம்ஃபி தியேட்டருக்குள் நுழைவதைப் போல இருந்தது. இடது பக்கத்தில் ஒரு பெரிய சிலை. கங்கை நதிக்கு உருவம் கொடுத்து இருக்கிறார்களோ என்ற கேள்வி என் மனதில் எழ, நான் வாய் திறப்பதற்குள், “இந்த பிரம்மாண்டமான இடம் புதிதாகக் கட்டப்பட்டது, மோடிஜி ஆட்சிக்கு வந்த பின்...இந்த சிலை ராஜமாதா அஹில்யாபாய் ஹோல்கர். இந்தியா முழுதும் நூற்றுக்கணக்கான சிவன் கோயில்களை நிறுவி, தர்ம சாலைகளையும் அமைத்தவர். மராத்தா மாளவப் பேரரசின் மஹாராணி. பதினெட்டாம் நூற்றாண்டில் ஆட்சி பீடத்தில் இருந்த இந்தப் பெண்மணிதான் எதிரிகளிடமிருந்து காசி விஸ்வநாதரின் கோயிலையும் காபந்து செய்திருக்கிறார்,” என்றார் மாலன். காசிக்கு கிளம்புவதற்கு முன்னே கூகுளில் நுழைந்து நிறையவே படித்திருப்பார் என்றே நினைக்கிறேன்.

இருபது படிகள் இறங்கிச் சென்றால் கங்கையில் குளிக்கலாம். காலாவது நனைக்கலாம். தலையிலாவது தண்ணீர் தெளித்து சாப, பாவ விமோசனம் பெறலாம். என் மனைவிக்கு ஆசைதான். மாலன் அந்த ஆசையை முறியடித்துவிட்டார்.

“சாரனாத் செல்லலாம். இங்கிருந்து பத்தே பத்து கி.மீ.தான். அங்கேயே போய் சிற்றுண்டி சாப்பிடலாம்,” என்று பிரத்தியூஷ் சொல்ல கோயிலை விட்டு வெளியே வந்தோம்.

கார் டொக்கு... டொடக்கென்று ஒரு வழியாக சாரனாத் போய் சேர்ந்தது. மௌரியப் பேரரசின் சக்கரவர்த்தி அசோகர் கட்டியது. நிறைய நடக்க வேண்டி இருந்தது. பனிரெண்டாம் நூற்றாண்டில் படையெடுத்து வந்த துருக்கியர்கள், அசோகர் கட்டியதையெல்லாம் இடித்துப் போட்டுவிட்டுச் சென்றாலும், புத்தரின் நினைவுச் சின்னங்களாக பல இடிபாடுகள் சீரமைக்கப்பட்டு பாதுகாக்கப்பட்டு வருகின்றன. தாமெக் ஸ்தூபியை பழைய நிலைக்கு கொண்டுவரும் முயற்சியில் வேலை நடந்து கொண்டிருப்பதை பார்த்துவிட்டு வந்தோம். புத்தர் தனது முதல் பிரசங்கத்தை பிரசவித்த இடமாயிற்றே.

அங்கேயே ஓர் அருங்காட்சியகம். அதில் ஏறக்குறைய ஏழாயிரம் சிற்பங்கள், கலைப்பொருட்கள் உள்ளன. இந்திய தொல்லியல் துறையின் பழைமையான அருங்காட்சியகம். அன்று மாலை காசி தமிழ் சங்கமம் கலை நிகழ்ச்சிக்கு மாலன் தலைமை ஏற்க வேண்டியிருந்தால், பார்க்க வேண்டியவற்றை மட்டும் பார்த்துவிட்டு கார் ஏறிவிட்டோம். அசோகச் சக்கரம், தலையிழந்த புத்தர், அசோகரின் சிங்கமுகத் தூண் எல்லாம் இதில் அடக்கம். எங்கெங்கு பார்த்தாலும் பிரம்மாண்டம்தான். பிரமிப்புதான்.

விருந்தினர் மாளிகை சேர்ந்து மதிய உணவருந்திவிட்டு, சப்பாத்தி தஹி, சப்பாத்தி சப்ஜி தான் அறைக்குச் சென்று சிறிது நேரம் ஓய்வெடுத்திருப்போம். அவ்வளவுதான், “சார், கார் ரெடி. கலை நிகழ்ச்சிக்கு போகலாம்,” என்று சொல்லியபடி வந்து நின்றனர் மீராவும் பிரத்தியூஷும்.

நமது நாட்டின் 75-வது சுதந்திர ஆண்டு, அமிர்தப் பெருவிழாவின் ஒரு பகுதியாக, மத்திய அரசு இந்த ஆண்டு (2022) காசி தமிழ் சங்கமம் நிகழ்ச்சியை நவ.17ல் தொடங்கி ஒரு மாதம் நடத்தியது. இந்த நிகழ்ச்சியில் கலந்துகொண்டு நிகழ்ச்சியை சிறப்பிக்க பலதுறை வல்லுனர்கள் அழைக்கப்பட்டிருந்தாலும், இலக்கியத்திற்கு என பிரத்யேகமாக தமிழ்நாட்டிலிருந்து மாலனும் புதுச்சேரியில் இருந்து இருமொழி எழுத்தாளர் ராஜ்ஜாவும் (அதான் நான்) அழைக்கப்பட்டிருப்பது பெருமை பேசும்படியாகத்தான் இருந்தது.

பனாரஸ் இந்து பல்கலைக்கழகத்தின் மிகப் பெரிய திடல். அதில்தான் கண்களைப் பறிக்கும் வண்ணங்களில் பிரம்மாண்டமான கொட்டகை, மேடை எல்லாம். நிறைய பேர் உட்கார நாற்காலிகள். அவை நிறைந்திருந்தது. மக்கள் கூட்டம் நடக்கவிருக்கும் கலை நிகழ்ச்சிகளை கண்டு ரசிக்கவே கூடியிருந்தது.

மாலனின் தலைமையுரைக்குப் பின் விழா தொடங்கியது. மயிலாட்டம், ஒயிலாட்டம், கரகாட்டம் என பல கிராமப்புற நிகழ்ச்சிகள் நடந்தன. ஆட்டத்திற்கு ஏது மொழி? தமிழறிந்த, தமிழறியா சொந்தங்கள் அனைவருமே ரசித்தனர். காசி தமிழ் சங்கமத்தின் மூலம் தமிழையும் தமிழ்க் கலாச்சாரத்தையும் உலகறியச் செய்யும் நோக்கம் பூர்த்தியாவதை உணர்ந்தேன். வாழ்க தமிழ். வெல்க பாரதம்.

மறுநாள் (25-11-2022) காலை மாலனும் நானும் கலந்துகொள்ள வேண்டிய இலக்கிய நிகழ்ச்சி. மாலன் ‘காசியில் வாழ்ந்த பாரதி’ என்ற தலைப்பிலும் நான் ‘பாரதி - காசியிலிருந்து புதுச்சேரி வரை’ என்ற தலைப்பிலும் பேச வேண்டியிருந்தது. இவ்விலக்கிய விழாவிற்கு தலைமை தாங்க எங்க ஊரு துணைநிலை ஆளுநர் தமிழிசை வந்திருந்தார்.

ஆளுநர் பங்கேற்கும் நிகழ்ச்சியில் முதலிலேயே தேசிய கீதம் ஒலிப்பது மரபு. எங்களது நிகழ்ச்சி தொடங்கிய போதும் அப்படியே நடந்தது. தேசியகீதம் ஒலித்து முடிந்ததும், தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடல் பாடுவோம் என்று அறிவித்த ஆளுநர் தமிழிசை ‘நீராரும் கடலுடுத்த” என்று தொடங்கும் மனோன்மணியம் சுந்தரனார் எழுதிய தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலையும் பின்னர் பாரதிதாசனாரின் ‘வாழ்வினில் செம்மையை செய்பவள் நீயே” என்கிற புதுச்சேரி தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலையும் அவரே தொடங்கிப் பாடினார். பாடல்களைப் பாடத் தெரிந்தவர்கள் அவரோடு பாடினர். ஏதோ


பாரதியின் தங்கை மகன் பேராசிரியர் கிருஷ்ணன் உடன்

கொஞ்சம் தெரிந்தவர்கள் ஒப்புக்கு சப்பாணி போல் வாயசைத்தனர். கொஞ்சம் கூட தெரியாதவர்கள் அவரது வாயையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

தமிழிசை, இரண்டு மாநில தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடல்களையும் காசி மாநகரத்திலே பாடியதாலே பெருமைக்குரிய ஆளுநராக மக்கள் மத்தியிலே இடம்பிடித்தார். கைதட்டி ஆரவாரித்த மக்கள் இதை சொல்லாமல் சொல்லினர். எங்கள் மூவரின் பேச்சுமே பாரதி என்கிற மகாகவிஞனைப் பற்றித் தானே. யாருக்கு யாரும் இளைத்தவர் அல்ல என்பதை மக்கள் தெளிவுபடுத்தினர்.

இலக்கிய விழா இனிதே முடிந்தது. நாங்கள் காசி சென்ற வேலையும் இனிதே முடிந்தது.

இங்குதான் புதுடில்லி நேஷனல் புக் டிரஸ்ட் நிறுவனத்தின் தமிழ் எடிட்டர் மதன்ராஜை நேருக்கு நேர் முதல் தடவையாக சந்தித்தேன். நான் எழுதி அவர்கள் நிறுவனம் வெளிக் கொண்டுவந்த, 'எ டிரஷெரி ஆஃப் ஏன்ஷியன்ட் தமிழ் லெஜன்ட்ஸ்' என்ற ஆங்கிலப் புத்தகத்தை வெளியிடப் போவதாகவும், கவர்னர் தமிழிசையின் கையால் வெளியிட அனுமதி பெற்றிருப்பதாகவும் சொன்னார். கவர்னரும் புத்தகத்தை வெளியிட்டார். இந்த புதுச்சேரிக்காரன் எழுதிய ஆங்கிலப் புத்தகத்தை புதுச்சேரி கவர்னர் தமிழிசை வாரணாசி பல்கலைக்கழக வளாகத்தில் வெளியிட வேண்டும் என்பது காசி விஸ்வநாதரின் கட்டளை போலும். மதன்ராஜிக்கு மிக்க நன்றி. சரியான தருணத்தில் மிகச் சரியானவர் கைகளால் தமிழர்களின் பாரம்பரியக் கதைகளை ஆங்கிலத்தில் வெளியாக உதவியவர் அல்லவா!

மதியம் மூன்று மணிக்கு தமிழ்த்துறைப் பேராசிரியர் ஜெகதீசனை சந்திக்கலாம் என்று சொல்லிவிட்டு மாலன் ஓய்வெடுக்கச் சென்றுவிட்டார். எங்களுடனே மதிய உணவருந்திய மீராவும் பிரத்தியூஷும் மூன்று மணியளவில் எங்களை தமிழ்த்துறைக்கு அழைத்துச் சென்றனர்.

மிகப் பழமையான பனாரஸ் இந்து பல்கலைக்கழகத்தில் சொல்லிக் கொடுக்காத மொழி ஏதாவது இருக்கிறதா என்று கேட்டால், ஒரு கைவிரல்களே போதும், எண்ணிவிடலாம். பழமையை அப்படியே பாதுகாப்பதில் வல்லவர்கள் போலும் இவர்கள். நான் முதுகலை ஆங்கில இலக்கியம் பயின்ற சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. பழமை மாறாமல் பராமரிப்பது ஆயகலைகளில் ஒன்றாய் இருக்க வேண்டும்.

பேராசிரியர் ஜெகதீசனோடு பேசிக் கொண்டிருந்தோம். நீண்ட நேரம். பல்கலையில் 'பாரதி சிம்மாசனம்' அமைக்கும் வேலையில் முழு மூச்சோடு ஈடுபட்டிருப்பதைப் பற்றி பேசிவிட்டு, அதன் தொடக்கப் பணி காலத்தில் மாலனையும்

என்னையும் அழைக்க இருப்பதாகச் சொன்னார். நிச்சயம் எங்களால் ஆனதை பாரதிக்காகச் செய்வோம் என்று உறுதியளித்தோம். காசிக்கு எங்களை கொண்டு போய் சேர்த்தவரே பாரதி தானே. அவருக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறோமே.

அந்த சமயத்தில்தான் மாலன், ஜெகதீசனிடம் கேட்டார், "இங்கே பாரதி தன் இளமைக் காலத்தில் தன் அத்தையின் வீட்டில் வசித்தார் என்று படித்திருக்கிறோம், அந்த இல்லத்தை பார்க்க வேண்டுமே."

"நானே ஞாபகப்படுத்தலாம் என்று நினைத்திருந்தேன்," என்றார் பெரியநாயகி.

"நிச்சயம் போகலாம். பாரதியின் தங்கை மகன் பேராசிரியர் கிருஷ்ணன் அந்த இல்லத்தில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவருடைய மகள் ஜெயந்தியும் அங்குதான் வசிக்கிறார். அவரை எனக்கு நன்றாகவே தெரியும்," என்று சொல்லியபடியே அவரை தொடர்புகொண்டார். "இன்று மாலையே ஏழு மணிக்குப் போகலாம். நானும் உங்களோடு வருகிறேன். சரியாக ஆறரை மணிக்கு நீங்கள் தங்கியிருக்கும் விருந்தினர் மாளிகைக்கு வருகிறேன்," என்று சொன்னார் பேரா.ஜெகதீசன்.

அப்போது மணி நான்குகூட ஆகவில்லை. "பல்கலை வளாகத்திலே புதிதாக அமைக்கப்பட்டிருக்கும் காசி விஸ்வநாதர் கோயில் போகலாம்," என்று மீரா சொன்ன உடனே, பெரிய நாயகிக்கு ஏகப்பட்ட குஷி.

இந்தக் கோயிலுக்குள் செல்ல சந்து பொந்தெல்லாம் கிடையாது. கோயில் என்றதுமே நம் கண்முன் தோன்றும் மிகப் பிரம்மாண்டமான கட்டிடம்தான் இங்கும் இருந்தது. வித்தியாசமாக வேலைப்பாடுகளுடன். வடஇந்திய கட்டிடக் கலை.

கோயிலினுள் விஸ்வநாதரை மிகக் குனிந்துதான் பார்க்க முடியும். அப்போது பூசாரி என் கழுத்தில் ஒரு சிறு சாமந்தி பூ மாலையையும் மாலனின் கழுத்தில் எருக்கம் பூ மாலையையும் போட்டு ஆசீர்வதித்தார்.

கோயில் பிரகாரத்தை சுற்றி வரும்போது மாலன் சிரித்துக்கொண்டே, "எருக்கம் பூ மாலை பிள்ளையாருக்கு மட்டும்தான் போடுவார்கள், ஒரு வேளை என் தொந்தியைப் பார்த்துவிட்டு எனக்கு போட்டுவிட்டாரோ பூசாரி?" என்றார். நானோ "நம் இருவர் தொந்தியையும் ஒப்பிட்டுப் பார்த்திருப்பாரேயானால், நியாயமாக அதை எனக்குத்தான் போட்டிருப்பார்" என்றேன்.

நாங்கள் சிரித்துக்கொள்வதற்கான காரணம் புரியாமல் எங்களையே பார்த்துக் கொண்டிருந்த மீரா, "சார், எவ்வளவோ தூரத்தில் இருந்து எங்கள் ஊர் வந்திருக்கிறீர்கள். எங்கள் ஊர் ஸ்பெஷல் ஒன்று இருக்கிறது. அதை நீங்கள் ருசி பார்க்க வேண்டும்," என்றார்.

"ஆ... ஆங்... ஆமாம் சார், நிச்சயமா டேஸ்ட் பண்ணனும், நானும் அதை ருசித்து ரொம்ப நாள் ஆயிற்று," என்றார் பிரத்தியூஷ். எங்கள் அருகில் நின்றிருந்த கார் டிரைவரும், "மலெய்யோ எங்க ஊர் ஸ்பெஷல். வாங்க ரவிதாஸ் கேட்டுக்கு அழைச்சிக்கிட்டுப் போறேன். அதுக்கு எதிரிலெதான் பெஹல்வான் லஸ்ஸி கடை. அங்கே மலெய்யோ மிகப்பிரமாதமா இருக்கும்," என்று ஒத்து ஊதினார்.

"சரி! போகலாம். அதற்கு முன்னால் உங்கள் புராதன கால நூலகத்தைப் பார்க்க வேண்டுமே," என்றேன். "இதோ ஒரு இருபது அடி தூரத்தில்... வாங்க போகலாம்," என்றார் பிரத்தியூஷ்.

சயாஜி ராவ் கெய்க்வாட் நூலகம். ஒரு நூற்றாண்டு பழமை வாய்ந்த இந்த நூலகத்தின் அடித்தளத்தில் எல்லா நாற்காலிகளிலும் மாணவர்கள். புத்தகங்களை படித்துக் கொண்டும், மடி கணினியை நோண்டிக் கொண்டும் இருந்தது அரியதொரு காட்சியாகவே எனக்கு தோன்றியது. நம்ம ஊரில் நூலகங்களில் மாணவர்களை காணவே முடியாது.

நூலகத்தில் நுழைந்து ஒரு வலம் வந்தோம். எத்தனை லட்சம் புத்தகங்களோ? கோடியில் இருக்குமோ? நூலகரே அறிவார்.

கோட்டைக்கதவு மாதிரி ஏதோ ஒன்றைத் திறந்து, உள்ளே அழைத்துச் சென்றார்கள். தமிழ்ப் புத்தகங்களைப் பார்க்க ஆர்வம் காட்டினோம். படிக்கட்டில் ஏறிச் சென்றோம். அதிக அளவில் தமிழ்ப் புத்தகங்கள் இல்லை என்றாலும், அங்கு இருந்தவை அனைத்துமே பொக்கிஷங்கள் என்று சொல்லலாம். நான் கேள்வி மட்டுமே பட்டிருந்து, கண்களால் பார்க்க இயலாத புத்தகங்களை அங்கு பார்த்து புலகாங்கிதம் அடைந்தேன். மாலன் சில புத்தகங்களை கையில் எடுத்து, பிரித்து பதிப்பிக்கப்பட்ட ஆண்டைப் பார்த்து ஆச்சரியத்தில் மூழ்கினார்.

பெஹல்வான் லஸ்ஸி கடை. நம்ம தமிழ் பயில்வான்தான்; அங்கே இந்தியிலே பெஹல்வான். அவ்வளவுதான். பெரிய சமோசாவும் அதன்பின் மலெய்யோவும் வந்தன. மலெய்யோவை ரசிக்கத்தான் முடியும். வெறும் நுரை. வாய்க்குள் எடுத்துப் போட்டால் உருகி உள்ளே போய் விடுகிறது. அண்டா நிறைய சாப்பிட்டாலும் நிச்சயம் வயிற்றில் எங்கோதான் இருக்கும். ஆனால், அதன் சுவையே தனிதான். அதுவும் தெருக்கடையில் பெஞ்சில் உட்கார்ந்து சாப்பிடுவது மகிழ்ச்சியோ மகிழ்ச்சிதான்.


சயாஜி ராவ் கெய்க்வாட் நூலகத்தில்

வார்த்தை தவறாமல் வந்து சேர்ந்தார் பேரா. ஜெகதீசன். கார் ஊர்ந்து சென்றது. ஹனுமன் காட் வந்தது. வீட்டினுள் இருக்கும் சிவன் கோயில் நோக்கி நடந்துதான் போக வேண்டும். வீடு போன்றே இருந்த சங்கரமடத்தைத் தாண்டிச் சென்றோம். டீ-4ஃ57 எண் இட்ட மிகப் பழைய, பெரிய்ய வீடு. சிவமடம் என்று பெயர். திருமதி. ஜெயந்தி வரவேற்றார். "அப்பா உங்களையெல்லலாம் எதிர்பார்த்து காத்திருக்கிறார். வழக்கமாக அப்பா இப்போதெல்லாம் யாரையும் சந்திப்பதில்லை. பேராசிரியர் ஜெகதீசன் தமிழ்நாட்டிலிருந்து வந்திருக்கும் இரண்டு எழுத்தாளர்களோடு வருகிறார் என்று சொன்னதுமே பூரித்துப் போனார்," என்றார்.

தொன்னூற்று நான்கு வயதினைக் கடந்த பேராசிரியர் கிருஷ்ணன், பனாரஸ் இந்து பல்கலைக்கழகத்தின் இசைக்கல்லூரியில் மிருதங்கம் பயிற்றுவித்தவர். தனது மாமா பாரதியாரைப் பற்றியும் அவரது காசி தொடர்பைப் பற்றியும் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். பல தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலும் பேசி இருக்கிறார். எத்தனையோ விருதுகளையும் பெற்றிருக்கிறார். சொல்லப்போனால் பாரதி புதையலில் இவரும் ஒரு வைரம் தான்.

மாலனும் நானும் பாரதி பக்தர்கள் என்று ஜெகதீசன் அறிமுகப்படுத்தியதுமே, கிருஷ்ணன் தான் பார்த்திராத பாரதியைப் பற்றி இடைவிடாமல் அரை மணி நேரத்திற்கும் மேலாக அவரது எண்ணங்களை எங்களோடு பகிர்ந்து கொண்டார்.

திருமதி ஜெயந்தி "போதும்' என்று எங்களைப் பார்த்து சைகை காட்டவே, நாங்கள் அனைவருமே எழுந்து நின்று, அவரிடம் ஆசி பெற்றோம். நாங்கள் அவரை சந்தித்ததின் ஞாபகர்த்தமாக அவர் எழுதிய "மகாகவி பாரதியாரின் வாழ்க்கைக் குறிப்புகள்' என்ற மும்மொழி நூலினை (இந்தி, தமிழ், ஆங்கிலம்) எனக்கும் மாலனுக்கும் ஆளுக்கொரு பிரதியினை கையொப்பமிட்டுக்கொடுத்து வழியனுப்பிவைத்தார். பேராசிரியர் ஜெகதீசனுக்கு நன்றிக் கடன் பட்டிருக்கிறோம்.

மறுநாள் (நவ.26, 2022) காலை எங்கும் வெளியே செல்ல முடியவில்லை. காரணம் நாங்கள் பத்து பத்தரைக்கெல்லாம் கிளம்பினால்தான் விமான நிலையத்திற்கு குறிப்பிட்ட நேரத்திற்குள் போய்ச் சேர முடியும். சென்னை செல்லும் இண்டிகோ விமானம் புறப்படும் நேரம் மதியம் 2.40.

எட்டு மணிக்கெல்லாம் பல்கலைக்கழக ஆங்கிலத்துறையைச் சேர்ந்த ஒரு தம்பதியினர் - பேராசிரியர்கள் பஞ்சனன் தலாய், திரித்தி ராய் தலாய் - விருந்தினர் மாளிகைக்கு வந்து என்னோடு அளவளாவி விட்டுச் சென்றனர். அவர்கள் இதுவரை எழுதிய புத்தகங்களையம் கையெழுத்திட்டு என்னிடம் கொடுத்தனர். அவர்கள் இருக்கும்போதே புதுடில்லியில் இருந்து வெளிவரும் 'திட்டம்' என்ற அரசாங்க மாத இதழின் ஆசிரியர், சஞ்சய் கோஷ், தன் பத்திரிகையில் வெளியிட என்னை நேர்காணல் கண்டார். அது முடிந்ததும் அவரை மாலனின் அறைக்கு அழைத்துச் சென்று அவரை அறிமுகப்படுத்தி வைத்தேன். மாலன் எனக்கு செய்த, செய்யும் உதவிகளுக்கு என்னால் முடிந்த சிறு கைமாறு. அவ்வளவே.

பத்தரை மணிக்கெல்லாம் பிரத்தியூஷ், மீரா, மற்றும் பல பேராசிரியர்கள், மாணவர்கள் எங்களை வழியனுப்ப வந்துவிட்டார்கள். கார் நகர்ந்தது. இந்த தடவை குறுக்குப்பாதை, நேர் பாதையில் போனால் விமானத்தை விட்டுவிடுவோம் போல.

மனம் கனத்தது. குறுக்கு வழிப்பாதையோ டங்கு டிங்கு தான். வாரணாசியின் கிராமப்புறப் பகுதிகளை பார்க்க முடிந்தது. ஒரு வழியாக விமான நிலையம் வந்து சேர்ந்தோம்.

எங்களை வழியனுப்ப விமான நிலையம்வரை எங்களுக்கு பாதுகாப்பாக பயணித்த மீராவும் பிரத்தியூஷும் சற்றே கண்கலங்கினர். அன்புதானே ஜாதி, மதம், இனம், மொழி என்கின்ற வற்றையெல்லாம் இணைக்கும் பாலம். "உங்களையெல்லாம் இனி எப்போது பார்ப்போம்," என்று ஒரே குரலாக சொல்லினர் மீராவும் பிரத்தியூஷும்.

"நிச்சயம் சந்திப்போம். உலகம் உருண்டைதானே." என்று மாலன் சொல்ல, பெரிய நாயகியோ, "புதுச்சேரிக்கு வாருங்கள். உங்கள் உறவினர் நாங்கள். எப்போதும் எங்கள் பாசக்கரங்கள் நீளும்," என்றார்.

நானோ "நாளை நடக்க இருப்பதை யாமொன்றும் அறியோம் பராபரமே" என்று அவர்களைப் பார்த்து புன்முறுவலித்துவிட்டு, விமான தளத்திற்குள் நுழைந்தேன்.

**ராஜ்ஜா** <rajbusybee@gmail.com>

# சித்தா

## கருணாகரன்

**ஓவியம்: நடேஷ்**

மழை விடாது பெய்து கொண்டிருந்த ஒரு பின்னேரம் தேவி சித்தியை மணம் முடித்து வந்தார் சித்தப்பா. அப்பொழுது குளத்தில் விரால் மீன் பிடித்துக் கொண்டிருந்தார் அண்ணா. சித்தப்பாவுக்கும் விரால் மீன் பிடிக்கும் என்பதை அன்றே அறிய முடிந்தது. அன்று விரால் மீன் பொரியலையும் குழம்பையும் விரும்பி உண்டார். "மஞ்சளையும் உப்பையும் கொஞ்சம் அதிகமாகச் சேர்த்துப்பொரியல்செய்தால்பிரமாதமாகஇருக்கும்" என்றார். ஏனோ சித்தி வெட்கப்பட்டுச் சிரித்த மாதிரியிருந்தது.

பிறகு நேரம் கிடைக்கும் போதெல்லாம் அண்ணாவோடு சித்தப்பாவும் அண்ணா இல்லாத போது சித்தப்பா தனியாகவும் குளத்தில் தூண்டில் போட்டார்கள். விரால், யப்பான், சிலாப்பி என்று வகைவகையான மீன்களை நார்க் கோர்வையில் போட்டுத் தூக்கி வந்தார்கள். எந்தப் பக்கமாக மீன்பாடுண்டு என்பது அண்ணாவை விட, சித்தப்பாவுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. பிடிக்கிற மீனில் விதவிதமாகச் சமையல் செய்தார். ருசியும் அப்படித்தான். அவருடைய கைராசி அப்படி என்றார் அம்மா. சமையலில் மட்டுமல்ல, வண்டி ஓட்டுவது, வாகனங்களைத் திருத்தம் செய்வது, தென்னைக்குக் குழி வெட்டுவது, வெல்டிங் செய்வது, கடைச்சல் வேலை, கட்டுமானப் பணிகள், தச்சுவேலை, வயல், தோட்ட வேலைகள், வேலி அடைப்பு, தேங்காய் பறிப்பது, பனையில் ஓலை வெட்டுவது என அவருக்குத் தெரியாத வேலைகளே இல்லை. இயக்கத்தில் இருக்கிற ஆள், ஆமியைச் சுடுவதற்கும் அப்பால் எங்கேதான் இதையெல்லாம் பழகினாரோ என்று ஆச்சரிப்பட்டார்கள் எல்லோரும்.

இவ்வளவு வேலைகளைத் தெரிந்து வைத்திருக்கும் சித்தப்பாவின் உறவுகளைப் பற்றியாருக்கும் எதுவுமே தெரியாது. அதை அவர் சொன்னதும் இல்லை. அவரிடம் யாரும் கேட்டதுமில்லை. திருமணத்துக்கு முன்பு தேவி சித்தியிடம் சித்தப்பாவைப் பற்றி வீட்டில் அப்பா விசாரித்தார். அதற்காக ஒரு நாள் சித்தப்பாவிடம், "உங்களுடைய சொந்த வீடேங்கே?" என்று கேட்டிருக்கிறார் தேவி சித்தி.

"நாடே இல்லாத நமக்கு எப்பிடிச் சொந்த வீடிருக்கும்?" என்றாராம் சித்தப்பா.

"அதிருக்கட்டும். உங்களுடைய அப்பா, அம்மாவின்ர பேரென்ன? அவை எங்க இருக்கினம்?" என்று கேட்டார் தேவி சித்தி.

"அதெல்லாம் இப்ப எதுக்கு? நான்தானே மாப்பிள்ளை. என்னைத்தானே கட்டப்போறீங்கள்?" என்று கேட்டார் சித்தப்பா. போதாக்குறைக்கு, "என்னை நம்பலாம். என்னை விட இயக்கத்தை நம்பலாம்" என்றார்.

இப்படித்தான் அவர், சில வேளை இடக்கு முடக்காகக் கதைப்பார். அல்லது காதில் வாங்காத மாதிரி இருந்து விடுவார். இதனால் இதற்கு மேல் சித்தப்பாவிடம் தேவி சித்தி எதுவும் பேசியதில்லை. மற்ற ஆட்களும்தான்.

சித்தியை மணம் முடித்தபோது அவரிடம் அடையாள அட்டையே இருக்கவில்லை. அதனால் அவர் பிறந்த இடத்தைக் கூட எவராலும் அறிய முடியவில்லை. அடையாள அட்டை எடுக்கவேண்டும் என்று வந்தபோது அதற்குப் பிறப்பு அத்தாட்சிப் பத்திரம் தேவைப்பட்டது. பிறப்பு அத்தாட்சிப் பத்திரத்தை பெறுவதாக இருந்தால் உரிய விவரங்களை பதிவாளர் அலுவலகத்துக்குச் சமர்ப்பித்து விண்ணப்பிக்க வேணும்.



ஆனால், தன்னிடம் அதைப் பற்றியெல்லாம் கேட்க வேண்டாம் என்று சித்தியிடம் ஒரேயடியாகச் சொல்லிவிட்டார். இயக்கத்தில் சேரும்போது பிறப்புப் பத்திரமும் தேவை



என்றொரு விதிமுறை இருந்திருந்தால் இப்ப இப்படிக் கரைச்சல் படத் தேவையில்லை என்று பட்டது சித்திக்கு. என்னதான் மகிழ்ச்சியான பொழுதுகளைத் தந்தாலும் அடையாளம் தெரியாமல் ஒரு மனிதர் இருப்பது எவ்வளவு பிரச்சினை? சித்திக்கு வழி ஒன்றுமே தோன்றவில்லை. இதற்கு என்ன செய்யலாம் என்று யார் யாரிடம் எல்லாமோ கேட்டுக் கொண்டேயிருந்தார். கடைசியில் எப்படியோ சித்தப்பாவுக்குப் பிறப்பு அத்தாட்சிப் பத்திரம் கிடைத்தது. அது சித்தி கொடுத்த விவரங்களின் படிதான். சித்தி கெட்டிக்காரியல்லோ! யாரையோ பிடித்து எப்படியோ அதை எடுத்துவிட்டார்.

சித்தி கொடுத்த விவரங்கள்..

பிறந்த திகதியும் இடமும்: 1971 எழுபத்தியோராம் ஆண்டு ஐப்பசி மாதம் 29 இருபத்தி ஒன்பதாம் திகதி - பெரியபோரதீவு, மட்டக்களப்பு.

பெயர்: விஜயகுமார்

தகப்பன் - முழுப்பெயர்: ராமச்சந்திரன் கருணாநிதி

பிறந்த திகதி: 1945.06.29

பிறந்த இடம்: மகிழடித்தீவு

சாதி: இலங்கைத் தமிழர்

அந்தஸ்து அல்லது தொழில்: விவசாயம்.

தாய் முழுப்பெயர்: ஸ்ரீதர் நிர்மலா

பிறந்த திகதி: 1950.09.19

பிறந்த இடம்: கரடியனாறு

சாதி: இலங்கைத் தமிழர்

வயது: 21 வருடங்கள்

பெற்றோர் விவாகம் செய்தவர்களா?: சமயாசாரப்படி..

எங்களுக்கு இந்தப் பெயர் புதிதாக இருந்தது. சித்தப்பாவுக்கும் புதிதாக இருந்திருக்க வேணும். பிறப்புப் பத்திரத்தை நான்கைந்து தடவை புரட்டிப் பார்த்து விட்டு, முகத்தில் துளிர்த்த மெல்லிய சிரிப்போடு சித்தியிடம் அதைக் கொடுத்தார். எல்லாம் திருப்திதானே என்பதைப்போல ஒரு பார்வையோடு சித்தி அதை வாங்கி வைத்தார்.

விஜயகுமார் என்ற பெயரை தன் விருப்பப்படி தேர்வு செய்ததாக தேவி சித்தியே ஒரு நாள் சொன்னார். அது அவருடைய கனவுப் பெயர். அவருக்கு மிகப் பிடித்த நடிகர் விஜயகுமார்.

இப்பொழுது விஜயகுமாரைத் தன்னுடைய கணவராக்கி விட்டார். அதற்குப் பிறகு போனஸ் முத்தங்கள் சித்தப்பாவுக்கு - விஜயகுமாருக்கு - கிடைத்திருக்கக் கூடும். அதைப்போலப் போலவே சித்தப்பாவின் தாயாராக, தனக்கு விருப்பமான நடிகை நிர்மலாவின் பெயரைப் பதிந்திருக்கிறார். நிர்மலாவை 'வெண்ணிற ஆடை' படத்தில் அறிமுகப்படுத்திய ஸ்ரீதரின் பெயரை விட்டு விடலாமா? அதைச் சித்தப்பாவின் தாயாரின் தந்தைக்கு (பேரனுக்கு) இட்டிருக்கிறார். சித்தப்பாவின் தந்தை பெயரை கருணாநிதி என்று வைத்தார். கருணாநிதியை தேவி சித்தியின் அம்மாவுக்கு-எங்களுடைய அம்மம்மாவுக்கு - பிடிக்கும். அதற்கும் ஒரு வாய்ப்பைக் கொடுத்தார். தந்தைக்கு (பாட்டனுக்கு) ராமச்சந்திரன் என்று வைத்தார். அது அம்மப்பாவுக்குப் பிடித்த பெயர். அவர் சோபாஷக்தியைப் போல எம்.ஜி.ஆரின் பரம ரசிகர். அவருடைய விருப்பத்தையும் நிறைவேற்றியா யிற்று. தேவி சித்தி அனைவருடைய உணர்வுகளுக்கும் மதிப்பளிக்கும் ஜனநாயகவாதினார்.

சித்தப்பா, தேவி சித்தியை மணம் முடித்து வந்தபோது விளம்பன் என்ற பேரிலேயே இருந்தார். அவருடைய இயக்கப் பெயர் அது. இயக்கத்தில் இருந்தபோதே தேவி சித்தியை விளம்பன் காதலித்தார். உண்மையில் விளம்பன் காதலித்தாரா அல்லது தேவி சித்திதான் விளம்பனைக் காதலித்தாரா என்று சரியாகத் தெரியாது. அல்லது அண்ணலும் நோக்க, அவளும் நோக்கினாள் என்ற மாதிரி இருவரும் ஆளையாள் சரித்தார்களோ தெரியாது. எப்படியோ அந்தச் சரிப்பு ஒரு கோளாறுமில்லாமல் நல்லபடியாகத் திருமணத்தில் முடிந்தது.

இயக்க முறைப்படி நடந்த திருமணத்தின்போது சித்தப்பாவின் பெயர் பெருமாள் ஞானராஜ் என்றே யிருந்தது. இயக்கத்தின் ரகசியப் பிரிவில் அவர் வேலை செய்தபடியால், அந்தப் பெயர் உண்மையானதா அல்லது அதுவும் புனைபெயரா என்று உறுதியாகத் தெரியாது. அதைப் பற்றி யாரும் விசாரிக்கவும் விரும்பவில்லை. விசாரிக்கவும் முடியாது.

ஆனால், தேவி சித்திக்குக் குழந்தை கிடைத்தபோது, பிள்ளையின் பெயரைப் பதிவு செய்வதற்கு சித்தப்பாவின் முழுப்பெயர் மெய்யாகவே தேவையாக இருந்தது. அதோடு சித்தப்பா அடையாள அட்டையை எடுக்க வேண்டியும் வந்தது. அதனால்தான் கருணாநிதி விஜயகுமார் என்ற பெயரில் சித்தப்பாவுக்குப் பிறப்புப் பத்திரத்தை எடுத்தார் தேவி சித்தி.

"தேவி சித்தி இரண்டு பிள்ளைகளுக்கு ஒரேயடியாக பிறப்புச் சேட்டிபிக்கற்றை எடுத்திருக்கிறா" என்று கேலியாகச் சிரித்தாள் அக்கா.

என்ன, ஏதென்ற மாதிரி விளித்த அம்மாவிடம் சொன்னாள், "ஒண்டு பெரிய பிள்ளைக்கு. ஒண்டு சின்னப் பிள்ளைக்கு."

"அதைவிடப் பெரிய விசயம் என்ன தெரியுமா?" என்று கேட்டார் சின்ன மாமா.

அக்கா விளித்தாள்.

"அடியேய், அவள் இயக்கத்தை விடப் பெரிய ஆள். உங்கட சித்தப்பாவின்ரை வரலாற்றையே புதிசாப் புனைஞ்சு வைச்சிருக்கிறாள்" என்றார் சின்ன மாமா.

எல்லோரும் சிரித்தார்கள். "சித்தியைப் பற்றி உங்களுக்கென்ன தெரியும்? மகா கெட்டிக்காரியல்லவா! போர்க்களத்திலேயே புலியை மடக்கியவரல்லோ!" தேவி சித்தி பொய்க்கோபம் காட்டி, "போடி" என்றார். முகத்தில் பெருமிதம் ஒளிர்ந்தது.

முப்பத்தி நான்கு வயதில் தேவி சித்தி போர்ப்பணிக்குச் சென்றார். அவருக்குக் கீழேயிருந்த தங்கமலர் என்ற தங்கையும் தங்கரதன் என்ற தம்பியும் திருமணம் செய்துகொண்ட பிறகு அம்மம்மாவுடன் தேவி சித்தி தனியாளாகத்தானிருந்தார். குடும்பத்தில் ஒருவர் போர்ப்பணிக்குச் செல்ல வேண்டும் என்றபோது தங்கத்தேவி களமுனைக்குச் சென்றார். அப்பொழுதுதான் ஆனையிறவு வெட்டையில் விளம்பனைச் சந்தித்தார். அதொரு வாழ்க்கைத் தொடக்கத்துக்கான சந்திப்பு என்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

அது ஆனையிறவில் இராணுவம் நிலைகொண்டிருந்த காலம். சோளகக் காற்று வெட்டையிலுள்ள உவர் மண்ணை அள்ளிக் கண்ணில் தூவிக் கொண்டிருந்தது. கொளுத்தும் வெயிலில் கறுத்து, வதங்கிப்போயிருந்தார் தேவி சித்தி. ஆனாலும் துடிப்புக் குறையவில்லை. அந்த வழியே வந்த விளம்பன், எதேச்சையாக தேவி சித்தியையும் கூட நின்ற மற்றப் பெண்களையும் பார்த்திருக்கிறார். ஆனாலும் ஒன்றுமே பேசவில்லை. விளம்பன் களப்பணியில் நிற்கும் போராளியல்ல. ஏதோ ஒரு வேலையின் நிமித்தமாக அங்கே வந்திருக்கிறார். என்றாலும் அந்த ஒரு நாள் சந்திப்பு பிறகு கலியாணம் வரை வந்தது ஆச்சரியம்தான்.

சித்தப்பா கதை சொல்லுவதில் மகா கெட்டிக்காரர். ஆனால், கண்டபாட்டுக்கு எந்த நேரமும் கதைத்துக் கொண்டிருக்க மாட்டார். கதைப்பதற்குப் பதிலாக எதையாவது செய்து கொண்டிருக்கலாம் என்ற கொள்கையுள்ள ஆளைப்போல எந்த நேரமும் எதையாவது செய்து கொண்டே யிருப்பார். இருந்தாற்போல கோடைமழையைப் போல திடீரென்று அவருக்கு உற்சாகம் வந்து

விட்டதென்றால், கேட்க வேண்டியதில்லை. கதை கதையாக கொட்டும்.

"ஏய்.. உங்களுக்குத் தெரியுமா, காட்டுக்குள்ளால் நடந்து கிழக்க போவம். வழிகாட்டியாக மயில்குஞ்சன் அண்ணன் வருவார். அவருக்கு காட்டு வழியெல்லாம் அந்த மாதிரி விளங்கும். காட்டு வழியெண்டால்...என்ன தெரியுமா?" என்று ஒரு கேள்வியை எழுப்பி ஆட்களைப் பார்ப்பார்.

கேட்கிற ஆட்களுக்கு என்ன தெரியும்? அவர்கள் அந்த வழியால் ஏன் போகிறார்கள்? அவர்கள் எதுவும் பேசாமல் பேந்தப் பேந்த விளிப்பதைப் பார்க்க சித்தப்பாவுக்கு உற்சாகம் ஏறிவிடும். அந்த உற்சாகத்தில் தொடர்ந்து சொல்வார்..

"அது மயில்குஞ்சண்ணைக்குக் கடவுள் காட்டுகிற வழி. எங்க ஆறிருக்கும்? எங்க குளமிருக்கும்? எந்தப் பாதையில எந்த நேரம் போகவேணும்? எந்தப் பக்கமாக கரடி போயிருக்கு? யானைக் கூட்டம் எங்க நிற்குது? தனியன் யானை எந்தப் பக்கமாக வரும்? இப்பிடி எல்லாத்தையும் ஆள் அந்த மாதிரி அறிஞ்சு வைச்சிருக்கும். இல்லையெண்டால் எப்பிடி ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு வழியால் ஆட்களைக் கூட்டிக்கொண்டு தட்டாமல் முட்டாமல் போகேலும்?" என்று மீண்டும் ஒரு கேள்வியோடு நிறுத்துவார். நிறுத்தி விட்டு ஆட்களைப் பார்ப்பார். அப்பொழுது அவருடைய குரலிலும் பார்வையிலும் ஒரு இது ஏறியிருக்கும். இது என்றால் ஒரு எழுப்பம் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

"மயில்குஞ்சண்ணைக்குக் கடவுள் புதுப்புது வழியைக் காட்டலாம். அது அவருக்கும் கடவுளுக்கும் இடையில் உள்ள குடுக்கல் வாங்கல். எனக்குத் துளி கூடக் கடவுள் நம்பிக்கை கிடையாது. ஆனால், எனக்கும் கொஞ்சம் புது வழியளைப் பற்றித் தெரியும். ஆனால், இயக்கம் என்ரை சொல்லைக் கேட்காது. அதால நானும் அதைப்பற்றிக் கதைக்கிறேல்ல.."

"ஏன் சித்தப்பா, நீங்களும் இயக்கம்தானே! பிறகெப்படி உங்கட சொல்லை இயக்கம் கேட்காது? இயக்கம் கேட்காது எண்டால், நீங்கள் வேற. இயக்கம் வேறயா!" என்று கேட்டார் அண்ணா.

"அடேய், எல்லாரும் இயக்கம்தான். ஏன் நீங்கள் இயக்கமில்லையே. இயக்கத்தின்ரை பாட்டைக் கேட்கிறியள். அதைப் பாடுறியள். இயக்கப் பெடியளின்ரை படத்தையெல்லாம் வைச்சிருக்கிறியள். போராளிகளைக் கண்டால் துவக்குகளை வாங்கிப் பார்க்கிறியள். அப்ப நீங்களும் இயக்கம்தானே!" என்று மடக்கினார்.

"ஆனால், நாங்கள் பயிற்சி எடுக்கவும் இல்லை. பயிற்சி குடுக்கவும் இல்லை. பயிற்சி பெறாத ஆட்கள் எப்பிடி இயக்கமாக இருக்கேலும்? பயிற்சியோட சத்தியப்பிரமாணமும் எடுக்க வேணும் அல்லவா!" சித்தப்பாவை மடக்கினார் அண்ணா.

"இயக்கம் எண்டால் அப்பிடித்தானிருக்கும். இயக்கத்தில இருக்கிற எல்லாரும் பயிற்சி எடுக்கிறதும் இல்லை. சண்டைக்குப் போறதும் இல்லை. அவரவருக்கெண்டு வேலைகள் இருக்கும். அதுக்குத் தோதாக ஆட்களைப் பிரிச்சு வைச்சு வேலை செய்யும். உங்களுக்குத் தெரியாமலே நீங்கள் கூட இயக்கத்தின்ரை வேலைகளைச் செய்வியள்.."

சித்தப்பா சொல்வதை மறுக்க முடியாது போலிருந்தது. நாங்களும் இயக்கம்தானா என்ற சந்தேகம் வந்தது அக்காவுக்கு.

"அப்பிடியெண்டால், எங்களுக்குக் குப்பி இல்லையே! பயிற்சி எடுக்காட்டிலும் இயக்கமெண்டால் கட்டாயம் குப்பி இருக்குமல்லவா!" என்று கேட்டார் அண்ணா, நெற்றியைச் சுருக்கி, கண்களைக் கூர்மையாக்கியபடி.

சித்தப்பா ஒரு கணம் பதில் சொல்ல முடியாமல் தடுமாறினார். "அப்ப உங்கட குப்பியைத் தாங்கோ.. நாங்களும் இயக்கம்தானே!" என்ற அண்ணா, சித்தப்பாவின் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த சயனைட் குப்பியை பாய்ந்து பறிக்க முயன்றார்.

"அதில அனுமதியில்லாமல் கை வைக்கக் கூடாது தம்பி. உங்களுக்கும் குப்பி கிடைக்கும். அதுக்கான வேலையை நீங்கள் செய்ய வேணும்" என்ற சித்தப்பா, சயனைட் குப்பியை எடுத்து சேர்ட்டினுள் பாதுகாப்பாக மறைத்து வைத்துக்கொண்டார்.

"அது சரி சித்தப்பா, நீங்கள் சொல்லுங்கோ! பிறகு காட்டு வழியில என்ன நடந்தது? மயில்குஞ்சண்ணை என்ன செய்வார்?" என்று கதையை ஆர்வத்தோடு தொடர்ந்தாள் அக்கா.

"வழியில சிங்களக் கிராமங்கள் இருக்கும். ஆனால், அதை விலத்தித்தான் மயில்குஞ்சண்ணை ஆட்களைக் கூட்டிக் கொண்டு போவார். சில வேளை காட்டுக்குள்ள விறகு வெட்டிறதுக்கோ வேட்டைக்கோ ஆட்கள் வாறதுண்டு. சிலர் மருந்துக்காக கிழங்குகளைத் தோண்டவும் வேர்களை எடுக்கவும் வருவாங்கள்.. அப்பிடி வாற ஆட்கள்தான் எங்களுக்குப் பிரச்சினை" என்ற சித்தப்பா, ஒரு பெருமூச்சை விட்டுக் கதையை நிறுத்திக் கொண்டு எழுந்தார். தனக்கு வேறொரு வேலை இருக்கிறது. கதையைப் பிறகு சொல்கிறேன் என்று புறப்பட ஆயத்தமானார். ஆனால், அக்கா விடவில்லை.

"அப்படி வாற ஆட்களால என்ன பிரச்சினை உங்களுக்கு?"

"அது பெரிய கதை. அதைப் பிறகு சொல்கிறன்" என்று சமாளித்தார்.

"அதைச் சொல்லிப் போட்டுப் போங்கோ"

என்று அக்கா வழி மறித்தாள். தேவையில்லாமல் வம்பில் மாட்டி விட்டேன் என்ற மாதிரி சித்தப்பா விளித்தார்.

"அப்பிடி வாற ஆட்கள் நாங்கள் காட்டுக்குள்ளால் போறதைக் கண்டால், படைகளுக்குப் போய்ச் சொல்லிப் போடுவினம். படைத்தரப்புக்குத் தகவல் கிடைத்தால், எங்கட பயணம் மட்டுமல்ல, எங்கட உயிருக்கே ஆபத்து. அதால, அவையளைச் சந்திப்பதைத் தவிர்ப்பம். அதையும் மீறி வழியில முட்டுப்பட்டிட்டால், அது பிரச்சினையாகீடும். இதுக்குத்தான் ஒழுங்கான வழிகாட்டி இருக்க வேணும் என்கிறது. நல்ல வழிகாட்டியெண்டால், அவர் எங்கட அணியை பாதுகாப்பான இடத்தில நிற்பாட்டிப் போட்டு, தன்னுடைய உதவியாளுடன் போய் வேவு பார்ப்பார். எல்லாம் சரியெண்டால் வந்து கூட்டிக் கொண்டு போவார். ஒரு பிரச்சினையும் வராது. அதுக்குத்தான் மயில்குஞ்சண்ணை வேணும்.." என்றார் சித்தப்பா.

"என்ன பிரச்சினை அது" என்று குடைந்தாள் அக்கா. அவளுடைய முகத்தில் வியர்வை துளிர்க்க பதட்டமாக இருந்தாள்.

"அது என்னெண்டு இப்ப சொல்லேலாது. ஆனால், அதைத் தவிர்க்க முடியாது. அந்த இடத்தில எங்கள நாங்கள் பாதுகாக்க வேணும். எங்கட பாதுகாப்புக்கு வேற என்ன வழியிருக்கெண்டு சொல்லுங்கோ"

"ஏன் நீங்கள் வேற வழியால போக முடியாதா? அல்லது அவையள உங்களோட கூட்டிக்கொண்டு போய் வேற இடத்தில வைச்சு விட்டிட்டுப் போகலாம்தானே! என்ற அக்காவைப் பார்த்துச் சிரித்தார் சித்தப்பா.

"அப்படித்தான் நானும் நினைச்சிருக்கிறன். ஆனால், அதெல்லாம் அந்தச் சூழல்ல நடக்கக் கூடிய காரியமில்லை. நாங்கள் போறதே பெரியபாடு. அதில தேவையில்லாத றிஸ்க்கை எடுக்கேலாது. அது எங்களை நாங்களே தற்கொலை செய்கிறதாகத்தான் போய் முடியும். மற்றது இந்த மாதிரிச் சந்தர்ப்பத்தில தேவையில்லாத கதைகளுக்கு இடமிருக்காது. அணித்தலைவர் எடுக்கிறதுதான் முடிவு. தன்னைக் கொல்ல வாற பசுவையும் கொல்லலாம் எண்டு சொல்லுவினம் தெரியுமா? ஆபத்துக்குப் பாவமில்லை."

அக்கா அதற்கு மேல் எதுவுமே பேசவில்லை. அவளுக்குச் சித்தப்பா சொன்னது பிடிக்கவேயில்லை. அதற்குப் பிறகு சித்தப்பாவுடன் அவள் கொஞ்ச நாளாக முகம் கொடுத்துப் பேசுவதே இல்லை.

சித்தப்பா இப்படிக் கிழக்குக்குப் போற கதைகளைச் சொன்னாலும் அவர் அப்படியொன்றும் அதிகமாக அந்தப் பயணத்தில் போய் வந்த ஆள் மாதிரித் தெரியவில்லை. அல்லது சில ஆண்டுகளுக்கு முன்பு எப்போதாவது போய் வந்திருக்கலாம். "அவருடைய பயண வழி மேற்குப் பக்கமாகத்தானிருக்கு. அதை மறைக்கிறதுக்குத்தான் அவர் இப்பிடி கிழக்குப் பயணத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்" என்றார் அண்ணா. சித்தப்பாவே ஒரு ரகசிய நடவடிக்கைக்காரர். அவரையே மோப்பம் பிடிக்கத் தொடங்கியிருந்தார் அண்ணா.

சித்தப்பாவைப் பற்றி அண்ணா சொன்ன இன்னொரு தகவல் - "அவர் மன்னார் வழியாக நீர்கொழும்புக்குப் போய் வாறார். அல்லது அந்த வழியால் அவற்றை பிரிவைச் சேர்ந்த ஆட்கள் யாரோ போய் வருகினம்" என்பதாகும்.

இன்னொரு தகவலையும் அண்ணா சொன்னார், "சித்தப்பாவுக்கு உதவியாக இருக்கிறது ஆர் தெரியுமா? மன்னார்ப்பக்கத்திலும் புத்தளத்திலயும் இருக்கிற முஸ்லிம்கள்தான்."

சித்தப்பாவுக்குத் தெரியாமல் அண்ணா இயக்கத்தின் இன்னொரு பிரிவுக்கு வேலை செய்வதற்காக மன்னாருக்குப் போயிருக்கிறார். அங்கே படையினருக்குத் தெரியாமல் அண்ணாவைப் பாதுகாப்பாக வைத்திருந்தது ஒரு அரசாங்க அதிகாரி. அவர்தான் அண்ணாவுக்கு இந்த விவரத்தைச் சொல்லியிருக்கிறார். அவருக்கு முஸ்லிகளோடும் நல்ல உறவிருந்தது.

சித்திக்கு இதையெல்லாம் கேட்கத் தலைசுற்றியது. "அவங்களை நம்பலாமா? அவங்களைத்தானே எங்கட ஆட்கள் முந்திக் கலைச்சவை! பிறகெப்படி, அவங்களை உதவிக்கு வைச்சிருக்கிறது? முந்திக் கலைச்ச கோவத்தில ஏதாவது பழிவாங்கினால்..!" என்று பதறினார்.

தேவி சித்தியின் கேள்வியில் நியாயமுண்டுதான். 'ஆனால், இயக்கத்துக்கு இதைப் பற்றியெல்லாம் தெரியாதா?' என்று யோசித்தாள் அக்கா.

"இதொண்டும் உங்களுக்கு விளங்காது சித்தி. இயக்கத்தைப் பற்றி நீங்கள் புரிஞ்சுகொள்ளவே மாட்டியள். இந்தச் சனங்களைப் பற்றியும்தான். ஆரை ஆர் நம்பிறது எண்ட பிரச்சினை இருக்கட்டும். ஆமியில இருக்கிற ஆட்களைக் கூட இயக்கம் தன்ரை தேவைக்குப் பாவிக்குது தெரியுமா? சில விசயங்களை அறிய எனக்கே அதிர்ச்சியாக இருக்கு!" என்று அண்ணா சொன்னதைக் கேட்டு மேலும் குழம்பினார் சித்தி.

"அரசியல்ல இதெல்லாம் சகஜமப்பா" என்று கவுண்டமணி சொல்வது ஞாபகத்துக்கு வந்தது. ஆனால், இந்த மாதிரி விடுதலைப் போராட்ட அரசியலுக்கும் இதுதான் விதியா? எனக் கவலைப்பட்டாள். எல்லாம் எங்கேயோ உதைப்பதைப் போலிருந்தது அக்காவுக்கு.



தேவி சித்தி தனக்குள்ளேயே சமாதானம் செய்து கொண்டார். கவலைப்பட்டுத்தான் என்ன ஆகப் போகிறது? சித்தப்பா எதையும் சரியாகச் செய்வார். அல்லது இயக்கம் சரியாகச் செய்யும் என்ற நம்பிக்கையில் அமைதியாகி விட்டார்.

அக்கா அப்பிடியில்லை. அவள் எதையும் கேள்வி கேட்டுக் கொண்டேயிருப்பாள். அண்ணாவும் அப்படித்தான். எதையும் அவர் துருவிக் கொண்டேயிருப்பார். அமைதியடையவே மாட்டார்.

யுத்தம் முடிந்த பிறகு சித்தப்பா, புனர்வாழ்வுக்குப் போய் வந்திருந்தார். புனர்வாழ்விலிருந்து வந்த சித்தப்பாவைப் பார்க்கவே முடியவில்லை. முழுசாக மாறி வேற யாரோ போலிருந்தார். மெலிந்து முகமே ஒடுங்கிப் போயிருந்தது. முந்திய உற்சாகத்தையெல்லாம் யாரோ உரிச்செடுத்துக் கொண்டு விட்டமாதிரித் தெரிந்தது. தேவி சித்தி அணைத்து அழுதாள். அக்காவுக்கும் அழுகை பொத்துக்கொண்டு வந்தது. அண்ணா கண்களில் நீர் தழும்ப நின்றார். சித்தப்பாவைப் பார்க்க வந்த அம்மாவும் அப்பாவும் சின்ன மாமாவும் என்ன பேசுவதென்று தெரியாமல் ஆளை ஆள் பார்த்துக் கொண்டிருந்தனர்.

பிறகு அம்மா எழுந்து தேவி சித்தியை அழைத்துக் கொண்டு போய் குசினிக்குள்ளே எதையோ செய்து கொண்டிருந்தார்.

சில நாட்கள் அடித்துப் போட்ட பாம்பு என்பார்களே, அந்த மாதிரி சோர்ந்து கிடந்தார். எதிலயும் பற்றில்லாத மாதிரித் திரிந்தார். பெரும்பாலான பொழுதும் வீட்டுக்குள்ளேயே முடங்கிக்கிடந்தார். முந்தியைப்போல சித்தப்பாவைத் தேடி அவருடைய நண்பர்கள் யாரும் வருவதில்லை. வாரத்துக்கு இரண்டு தடவை சில வேளை மூன்று தடவை என்று இராணுவப் புலனாய்வுப் பிரிவினர் மட்டும் வந்துபோனார்கள். சித்தப்பாவுக்குச் சிங்களம் நன்றாகத் தெரியும் என்பதால், அவர்களுடைய கேள்விகளுக்கெல்லாம் படபடவென்று பதிலைச் சொன்னார். எப்படித்தான் தெளிவான பதில்களைச் சொன்னாலும் அவர்களுக்குத் திருப்திப்பட்ட மாதிரித் தெரியவில்லை. திரும்பத்திரும்ப எதையோவெல்லாம் கேட்டுக்கேட்டு எழுதினார்கள். பைத்தியக்காரத்தனமாக முதல் கேட்ட கேள்விகளையே திரும்பவும் திரும்பவும் கேட்டார்கள். புனர்வாழ்வு என்ற அந்தச் சிறைக் கூடத்திலும் அப்படித்தான். இதற்காகத்தான் படையும் பயிற்சியுமா என்று தோன்றியது. ஆனாலும் சித்தப்பா அதைப் பற்றியெல்லாம் பொருட்படுத்தவில்லை. முந்திய ஆளென்றால் கதையே வேறு. வாயில் பொல்லாத வார்த்தைகள் எல்லாம் வந்து அடங்கின.

“ஒண்டைப் பற்றியும் கவலைப்படாதேங்கோ. நாங்கள் இருக்கிறம். கொஞ்ச நாள் போகட்டும். என்ன செய்யலாம் எண்டு யோசிப்பம். அதுவரையும் நீங்கள் பிள்ளைகளோட சந்தோசமாயிருங்கோ. தேவியும் களைச்சுப் போனாள். நீங்கள் வந்ததால அவளுக்கும் ஆறுதல். உங்களுக்கும் வீட்டோட இருந்தால் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்” என்று தெம்பூட்டினார் அப்பா.

அது சரிதான் என்பதைப் போல அம்மா தலையாட்டினார். தேவி சித்திக்கு அப்பாவின் இந்த வார்த்தைகள் ஆறுதலை மட்டுமல்ல, பெரிய சந்தோசத்தையும் கொடுத்தன. அவர் அப்பாவை நன்றியோடு பார்த்தார். கண்கள் நிறைந்தன. அன்றிரவு தேவி சித்தியின் கைகளில் 50 ஆயிரம் ரூபாயை வைத்து, ஒன்றும் பேசாதே என்ற மாதிரி வாயில் விரலை வைத்தா அம்மா.

சித்தப்பா, இரண்டு நாட்கள் வீட்டில் பிள்ளைகளோடு விளையாடினார். தேவி சித்தியோடு கூடமாட வேலைசெய்தார். அக்கம்பக்கத்து ஆட்களில் ஒன்றிரண்டு பேர் மட்டும் வந்து போனார்கள். அவர்களோடு கொஞ்ச நேரம் கதைத்தார். வந்தவர்களும் ஏனோ கொஞ்சம் பதட்டத்தோடிருந்த மாதிரித்தெரிந்தது. மற்றவர்கள் யாரும் வரவேயில்லை. நமக்கேன் வம்பு? நிலைமையைப் பார்த்து போய் வரலாம் என்று எண்ணியிருக்கக் கூடும்.

இரண்டு வாரத்தில் சித்தப்பா புது மனிதராகி விட்டார். வீட்டிலே சிறிய அளவில் ஒரு தோட்டத்தை உருவாக்கினார். நான்கைந்து வாகனங்களைப் பழுது பார்த்தார். இரண்டு ஆடுகளைக் கூட எங்கிருந்தோ வாங்கி வந்திருந்தார். அவருக்குத் தெரிந்த யாரோ ஒரு நண்பர் அந்த மாடுகளை வாங்கிக் கொடுத்ததாகச் சித்திக்குச் சொன்னார். வீடே மெல்ல மாறத் தொடங்கியிருந்தது. அது தேவி சித்தியிடம் நன்றாகவே தெரிந்தது. கிணற்றடியிலும் குசினியிலும் தேவி சித்தியின் பாட்டுக் கேட்டது.

வீட்டுக்கு வந்திருந்த ஈஸ்வரநாதன், "என்ன விளம்பன், தோட்டவேலை அமர்க்களமாகியிருக்கு! அப்படியே ஒரு கராஜ்ஜையும் போடுங்கோவன். டீசெல் எஞ்சின் வேலைக்காக சாவகச்சேரிக்கெல்லே போக வேண்டியிருக்கு" என்று ஒரு ஆலோசனைச் சிரிப்புச் சிரித்தார்.

"ஏதாவது ஒண்டைச் செய்யத்தானே வேணும் ஈசண்ணை. கொஞ்ச நாள் போகட்டும். எதையும் கொஞ்சம் பொறுத்துச் செய்யிறது நல்லது" என்றாள் தேவி சித்தி.

காலையில், நேரம் கிடைத்தால் மாலையில் குளத்தில் மீன் பிடித்தார் சித்தப்பா. விதவிதமாகச் சமைத்தார். வளவைத்துப்புரவு செய்து ஈரப்பலா, எலுமிச்சை, தென்னைகள் என இடம் பார்த்து எல்லாவற்றையும் வைத்தார். யாரிடமோ வாங்கி வந்து பூங்கன்றுகளை நட்டார். இப்பொழுது அவர் ஒரு முழுநேரக் குடும்பஸ்தன். ஒரு கால் சீரில்லை என்றாலும் அதை அவர் பொருட்படுத்திக்கொள்ளவில்லை. தாண்டித்தாண்டி எல்லாவற்றையும் செய்து கொண்டேயிருந்தார். இழந்த எதையோவெல்லாம் எடுக்க வேணும் என்ற வெறியோடு இயங்குவதைப்போலப் பட்டது.

"போரின் முடிவு எப்படியெல்லாம் ஆட்களை மாற்றியிருக்குப் பாத்தியளா?" என்று ஒரு நாள் சொன்னார் அப்பா. சித்தப்பாவைப் பார்க்க அவருக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

இப்பொழுது சித்தப்பாவுடன் அக்கா நன்றாகவே ஒட்டிக் கொண்டாள். கூடவே தம்பியும். அவருக்குப் பின்னால் இருவரும் நிழலாகவே தொடர்ந்தார்கள். அவருடைய குழந்தைகள் சிறியவர்கள் என்பதால் எல்லோருடைய மடிகளிலும் கைகளிலும் மாறி மாறித் தாவிக் கொண்டிருந்தனர். நிலத்தில் இருப்பதே குறைவானது.

நேரம் கிடைக்கும்போதெல்லாம் சித்தப்பா, கதைகளை அக்காவுக்கும் தம்பிக்கும் சொன்னார். ஆனால், அது வேறு கதை. புனர்வாழ்வுக் காலத்தில் நடந்த கதை.

புனர்வாழ்வு மையத்தில் சித்தப்பாவின் காலில் ஏற்பட்டிருந்த காயத்துக்கு கட்டுப் போட்ட ஆமிக்காரன் மொரவேவவைச் சேர்ந்தவன். பெயர் சோமவீர. அவனுடைய அப்பா ஜெயலத் பதும்சேன. வயது 54. காட்டுக்கு விறகு வெட்டச்செல்பவர். அவருக்குக் காடு நன்றாகத் தெரியும்.

ஒரு நாள் அவரை அத்துல ஜெயபண்டார என்ற கிராமிய வைத்தியர் (வெத மாத்தய) காட்டில் நன்னாரி வேர், சாத்தாவாரி, ஆவரை, வள்ளிக் கிழங்கு, துத்தி, குன்றுமணி, கருங்காலி, மகிள், கருவேல் என மூலிகைகளைச் சேகரிப்பதற்காக கூட்டிச் சென்றார். ஜெயலத்துடன் அவருடன் கூட எப்போதும் காட்டுக்குச் செல்லும் குமாரநந்தவும் வெதமாத்தய அத்துல ஜெயபண்டாரவும் அவருடைய உதவியாட்கள் இருவருமாக காட்டுக்குப் போயிருக்கிறார்கள்.

அது ஒரு வைகாசி மாதம். பொஸன் பூரணைக்கு முதல் வாரம். முன்னரவில் நிலவு காட்டின் மீது பொழிந்து, இரவில் மலரும் காட்டுப் பூக்களின் வாசனையை காடு முழுவதற்கும் பரவிக் கொண்டிருந்தது. தேனீக்களின் இரவுறக்கத்தைக் கலைக்கும் வாசனை அது. மர வண்டுகள் சத்தமிட்டுக் கொண்டிருந்தன. காட்டுப் பறவைகளின் சிறகடிப்பு இடையிடையே கேட்டுக்கொண்டிருந்தது. தூரத்தில் இடைவிட்டு ஊளையிட்டன நரிகள். சற்று முன்புதான் அந்த வழியில் மான் கிளையொன்று போன சுவடுகள் தென்பட்டன. ஈரம்காய புளுக்கை மணம் எழுந்து மூக்கில் ஏறியது.

பகல் முழுவதும் வேர்களையும் இலைகளையும் கிழங்குகளையும் சேகரம் பண்ணி முடித்த களைப்பாக இருந்தாலும் அதையெல்லாம் ஓரிடத்தில் சேர்த்து முடித்தனர். எல்லாம் முடிய இரவு ஏழு மணியாகி விட்டது. அங்கிருந்து நடந்தால் வீடு போய்ச் சேருவதற்கு எப்படியும் பதினொரு மணியாகும். அப்படியென்றாலும் அவ்வளவு பொருட்களையும் கொண்டு செல்ல முடியாது. அதனால் அன்றிரவு அங்கேயே தங்கினால் என்ன? அடுத்த நாள் முற்பகலோடு இன்னும் கொஞ்சக் கிழங்குகளையும் வேர்களையும் எடுத்துக் கொண்டு போகலாம் என்று சொன்னார் அத்துல ஜெயபண்டார.

அவரைப் பொறுத்தவரை அது சரி. செலவும் சிரமமும் குறைவு. ஆனால், ஜெயலத்துக்கும் குமாரநந்தவுக்கும் அதில் உடன்பாடில்லை.

"இந்தக்காட்டில்இரவுதங்குவதுபாதுகாப்பில்லை. கரடி, புலிப் பிரச்சினை வேறிருக்கு. என்ன சிரமம் என்றாலும் வீட்டுக்குப் போய் விட்டு காலையில் வரலாம். அல்லது மறுநாள் வரலாம். அதில்லை என்றால், கொஞ்சம் முன்னே போய்த் தங்கி விட்டு காலையில் வரலாம்" என்றார்கள்.

ஆனால், தங்களுக்கு அது கொஞ்சம் கஸ்ரமாக இருக்கும். ஒரு இரவுப் பொழுதுதானே. காட்டில் ஒரு பாதுகாப்பான இடமாகப் பார்த்து, தங்கியிருந்து, காலையில் மேலும் கொஞ்சக் கிழங்குகளையும் வேர்களையும் சேகரித்துக் கொண்டு போகலாம் என்றார் வெத மாத்தயா.

மருந்துக்கிழங்குகள், மூலிகைகளை எடுப்பதற்காகச் சென்று காடுகளைப் பழகியிருந்தாலும் ஒவ்வொரு காட்டிலும் உள்ள பிரச்சினை என்ன என்று வெதமாத்தயாவுக்கு தனியாக தெரியும் என்றில்லை.

"நீங்க சொல்றது உங்க பக்கத்தில சரி. ஆனாப் பாருங்க, காட்டு நிலவரம் அப்பிடியில்லை. இது சரியில்லாத சூழல். நாம போறதுதான் நல்லது" என்றார் அழுத்தமாக ஜெயலத்.

வெதமாத்தயா, ஜெயலத்தைச் சமாதானப்படுத்தி அன்றிரவு காட்டிலேயே தங்க வைத்துவிட்டார்.

விலங்குகளுக்கும் புழு, பூச்சிகளுக்கும் விலகி, ஒரு ஆற்றுப் படுக்கையில் உள்ள மோட்டையில் தங்குமிடத்தைத் தேர்ந்தனர். சேகரித்து வந்த கிழங்குகளும் வேர்களும் மூலிகைச் செடிகளும் ஓரமாக வேளா மரத்தின் அடியில் வைக்கப்பட்டன. காவு தடிகளை மரத்தில் சாத்தி வைத்தனர். தீயைப் பற்ற வைக்க முடியாது. காட்டுக்கு வந்த நேரத்திலிருந்து ஒரு பீடியைக் கூடப் பற்ற வைக்காமல் வாய் நசநசத்தது ஜெயலத்துக்கு. நெருப்போ, புகையோ, பீடி நாற்றமோ தங்களைக் காட்டிக் கொடுத்து விடும் என்ற எச்சரிக்கையில் மிகக் கவனமாகவே பகல் முழுதும் கிழங்கு தோண்டினார்கள். இரவு தீயை மூட்டினால் அவ்வளவுதான். பேயை விளக்கு வைத்து விருந்துக்கு அழைத்ததைப் போலாகிவிடும். ஆனால், நெருப்பைப் பற்ற வைக்காமல் காட்டில் தங்குவதும் கடினம். மட்டுமல்ல, அது பிழையும் கூட. நெருப்புக்குத்தான் வலிய காட்டான்கள் விலகும். சரியாகப் பேசக் கூட முடியவில்லை. சத்தமோ சந்தடியோ கேட்டால் வில்லங்கத்தைக் கூப்பிட்டு மடியில் வளர்த்துவதாகி விடும். ஆளையாள் பார்த்துக் கொண்டு இருட்டுக்குள் இருந்தார்கள்.

பசிக்கு கொண்டு வந்த கட்டுச் சோற்றை வேளையோடு சாப்பிட்டாச்சு. பகலில் தின்ற முரலிப் பழங்களில் மிச்சமிருந்ததை எடுத்துச் சாப்பிட்டார் வெத மாத்தயா. எடுத்து வைத்திருந்த தேனில் இரண்டு குளிகை அளவில் குடித்தார். ஜெயலத்துக்குப் பசிக்கவேயில்லை. மனம் நிலை கொள்ளாமல் தவித்தது. அங்கே இருப்பது அவருக்குப் பிடிக்கவேயில்லை. கருங்காலி மரத்தின் கீழ் வேரில் தலையைச் சரித்துப் படுத்தார். ஜெயலத்துடன் வந்திருந்த குமாரநந்த எழுந்து ஒன்றுக்கு அடிப்பதற்குப் பின்னாலே போனார். மற்றவர்கள் ஆளாளுக்கு இருப்பிடத்தைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தபோது திடீரென்று முளைத்ததைப்போல நான்கு பேர் சுற்றி வளைத்து நின்றார்கள். கைகளில் துப்பாக்கி. கத்தி வாள் போல அல்லது வாள்போலக் கத்தி.

காட்டுப் பறவைகள் கலவரப்பட்டன.

சுற்றி வளைப்பில் வெத மாத்தயாவும் அவருடைய உதவியாட்களும் ஜெயலத்தும் சிக்கி விட்டார்கள். குமாரநந்த அப்படியே மரமொன்றின் மறைவில் படுத்துவிட்டார்.

சிக்கிய நால்வரையும் கைளைப் பிணைத்து தள்ளிக்கொண்டு போனார்கள். வேர்ப்பொதிகளும் கிழங்கு மூடைகளும் அப்படியே மரங்களின் கீழே அநாதரவாகின. மரத்தின் மறைவில் படுத்த குமாரநந்த, மரத்தில் ஏறி இரவு முழுதும் இருந்து விட்டு, அடுத்த நாள் மாலையில் அங்கிருந்து புறப்பட்டுத் தனியாக வீட்டுக்குப் போனான்.

"குமாரநந்த மாமா பதறிக் கொண்டு தனியாக வந்தபோதே அம்மாவுக்கு எல்லாமே புரிஞ்சு போச்சு. அதுக்குப் பிறகு என்ன செய்யிறது? நான் அப்ப வீட்டில இல்லை. இந்த ராணுவப் பயிற்சியில இருந்தன். அப்பவோட காட்டு வேலையோட எல்லாம் நாசமாப் போச்சு. நிலத்தைப் பார்க்கக் கூட ஆளில்லை. அப்பா இல்லையெண்ட துக்கத்தில அம்மா அப்பிடியே உக்கிப் போச்சு.." என்று சொல்லி விட்டு எங்கோ வெறித்துப் பார்த்தான் சோமவீர.

கட்டுப்போட்ட காலை மடக்கிக் கொண்டு சோமவீரவையே பார்த்துக் கொண்டிருந்தார் சித்தப்பா. "அத விடுங்க மாத்தயா.. உங்களுக்கு குழந்தைகள் இருக்கா?" என்று சித்தப்பாவிடம் கேட்டான் சோமவீர.

கதையைச் சொல்லிக் கொண்டிருந்த சித்தப்பா, சாப்பிட்ட குறையில் எழுந்து போய்க் கைகளைக் கழுவினார்.

இரண்டு வாரமாக தங்கு வேலையில் நின்ற சித்தப்பா வீட்டுக்கு வந்தார். கையில் கட்டுப் போடப்பட்டிருந்தது. என்ன ஏது என்று பதறிப்போனார்கள் எல்லோரும். தேவி சித்திக்குக் கூட சித்தப்பா விவரம் ஏதும் சொல்லவில்லை. சின்னக் கட்டு என்பதால், சிறிய காயமாக இருக்கலாம். என்னதானிருந்தாலும் அதைத் தனக்குச் சொல்லியிருக்க வேண்டும் என்று சத்தம்போட்டார் தேவி சித்தி. சித்தப்பா ஒன்றுமே பேசவில்லை. கைக் கட்டை அவிழ்த்துக் காட்டினர். சிறிய வெட்டுக்காயம். வேலையிடத்தில் நடந்தது. "இப்ப ஏன் கட்டை அவிழ்த்தனீங்கள்?" என்று சீறினார் சித்தி. "நான் சொல்வதை நம்பவா போறாய் நீ. அதுதான் நீ பார்க்கக் காயத்தைக் காட்டினன்" என்றார். ஆனாலும் அவர் அன்றும் வீட்டில் ஓய்ந்திருக்கவில்லை. மழை பெய்து கொண்டிருந்தது. குளக்கரையில் மரக்கன்றுகளை நட்டார்.

அன்றிரவு பிள்ளைகளுக்குக் கதை சொல்லத் தொடங்கினார். அது அவர் செய்கின்ற வேலையைப் பற்றிய கதை..

எஞ்சினியர் அசோக்குமாருக்கு சித்தப்பாவை நன்றாகப் பிடிக்கும். எப்ப பார்த்தாலும் விஜயகுமார், விஜயகுமார் என்று கூப்பிட்டுக் கொண்டேயிருப்பார். சித்தப்பா போய்ச் சேர்ந்தது தெருவில் கல் பரவும் வேலைக்காக. இயந்திரங்கள் கல்லைப் பரவும்போது அதற்குத் தோதாக ஓரங்களைச் சரியாக்கிக் கொடுக்க



வேண்டும். சித்தப்பாவோடு வேறு மூன்று பேரும் இருந்தனர். பக்கங்களுக்கு இருவர் என்ற கணக்கில்.

அவர்களில் சித்தப்பாவுக்கு மட்டுமே சிங்களம் பேசத் தெரியும். கனரக வண்டிகளை ஓட்டவும் அதைப் பழுது பாக்கவும் தெரியும். ஒரு நாள் கனரக வண்டியொன்று பழுதாகி விட்டது. அவர்கள் வழமையான முறைப்படி நிறுவனத்தின் திருத்தம்செய் பகுதிக்கு அறிவித்து விட்டுக் காத்து நின்றனர். அந்த வண்டிக்குப் பக்கத்தில் நின்ற சித்தப்பா, எதையோ செய்து வண்டியை இயங்க வைத்துவிட்டார். திருத்தம்செய் பகுதி ஆட்கள் வந்து பார்த்துக் குழம்பிவிட்டார்கள். தங்களுடைய வேலையை எப்படி வேறொருவர் செய்ய முடியும்? என்று குழம்பினார்கள். ஒருவர் மட்டும் "ஆபத்துக்குப் பாவமில்லை" என்று சித்தப்பாவைப் பாராட்டி விட்டுப் போனார்.

அந்தச் சம்பவத்துக்குப் பிறகு சித்தப்பாவை திருத்தம்செய் பகுதியில் வேலை பார்க்கும்படி எஞ்சினியர் கேட்டார். அதற்கான ஏற்பாட்டைத் தான் செய்து தருவதாக. ஆனால், தனக்கு தெருவில் கல் பரவுகிற வேலையே போதும் என்றார் சித்தப்பா. "ஏனென்றால், தெருத்தான் சனங்களும் ஆடு, மாடு, நாய், பூனை என்று எல்லாமும் போய் வருகிற வழி. அதைச் சரியாக்குவதுதான் தனக்குப் பிடிக்கும்" என்றார்.

"தெருவைப் பாத்தீங்களா, அது எங்களுக்காகவே தன்னை விரித்துக் கிடக்குது. இரவிலும் பகலிலும் அது தூங்கிறதில்லை. மழையோ வெயிலோ எதெண்டாலும் புலம்புறது கிடையாது. அதை நாங்கள்தான் குறுக்க மறிக்கிறம். சிதைக்கிறம். கண்டபாட்டுக்கு அதை என்னவெல்லாமோ செய்யிறம். நான் தெருவில நிற்கேக்க உலகத்தின்ர வெளியில் நிற்பதைப் போலிருக்கும். தெருவிலே நிற்கிறது எண்டால் சும்மாவா! உலகத்தின்ர வழியில அல்லவா நிற்கிறம்! பாதையைச்சீராக்கிறது எண்டால் எவ்வளவு மகிழ்ச்சி! எத்தனை பேர் அதால போய் வருவினம்! எத்தனை பேரின்ரை கால்கள் படும்! பாதை ஒன்றைப் போடுறதொண்டும் லேசான சங்கதியில்ல. வாழ்க்கைக்கே போடுகிற பாதை அது.. உலகத்துக்குப் போடிற பாதை. வீடில்லை எண்ட கவலையே வேண்டாம். தெரு இருக்குது. எங்க வேணுமெண்டாலும் போகலாம்.. போய்க் கொண்டேயிருக்கலாம்."

கடுமையான காய்ச்சலில் படுத்திருந்த சித்தப்பா, இப்படி எதையெல்லாமோ சொல்லிக் கொண்டிருந்தார்.

மழை லேசாகத் தூறிக் கொண்டிருந்தது. ஆலம் பழங்களுக்காககிளிகள் கூட்டமாக வந்து கிளைகளில் கூடியிருந்த கிளிகளின் சத்தம் மழையை மீறிக் கேட்டது.

அக்காவின் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. சித்தப்பா அதைத் துடைத்துக் கொண்டு சிரித்தார்.

**கருணாகரன்** <poompoom2007@gmail.com>

# டி.கண்ணன் கவிதைகள்



1

மனதின் கோட்டையில் இருந்து வெளியேறி
ரதம் ஒன்று புறப்பட்டு விரைகிறது

காலமும் இசையும் வழி நடத்த
கோட்டையை விட்டு வெளியேறி...

இசையின் புதிர் வழியிலும்
காலத்தின் நேர் வழியிலும்
ரதத்தின் பயணம் தொடர்கிறது

மனதின் மதுரமான நினைவொன்று
மொட்டவிழும் நேரத்தில்

யதார்த்தத்தின் குரூர மறதியில் அவ்விசை
தேய்ந்து மறந்து (மறைந்து) போகிறது

ஒற்றை கால் ரதத்தை
ராவணன் கோட்டை விழுங்குகிறது

காலத்தைக் காணோம்

2

கனவொன்றின் அறை ஒன்றில்
சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள்

அருகாமை அறைகள் ஒவ்வொன்றும்
வெவ்வேறு ஆட்களின் கனவுகள்
போலும்...
ஒரு அறையில் குடித்துக் கொண்டிருந்தார்கள்
மற்றொன்றில் ஆம்பூர் பிரியாணியை
கடித்துக் கொண்டிருந்தார்கள்
சில அறைகளில் சப்தமான வாக்குவாதம்

வேறு சிலவற்றில்
நைட் ஷிப்ட் உறக்கம்
உதிர்ந்து கொண்டிருக்கும் ஓர் அறையில்
ஒருவன் படித்துக் கொண்டிருக்கிறான்
பூட்டப்பட்ட அறைகளில் அன்றைய இசை ஒலித்துக்
கொண்டிருக்கிறது

ஒரு குழாம் துணிகளை காயப் போட்டுக் கொண்டிருக்கிறது
வானில் நேற்றைய பறவைகளின் கூச்சல்
எல்லா அறைகளிலும் நானிருந்தேன்

ஒரே சமயத்தில் அனைத்து அறைகளிலும்
நுழைகிறது கனவின் அந்தி

**"டி. கண்ணன்"** <krishnaswamy164@gmail.com>

# கலாப்ரியா என்றொரு திசைமாற்றி

## சந்தியா நடராஜன்

ஸீரோ டிகிரி பப்ளீசிங் நிறுவனம் கவிஞர் கலாப்ரியாவுக்கு 'வாழ்நாள் சாதனையாளர் விருது' வழங்கி கௌரவித்துள்ளது. 10.12.2022 அன்று சென்னை முத்தமிழ்ப் பேரவை அரங்கத்தில் நடைபெற்ற மாபெரும் விழாவில் இந்த விருது வழங்கப்பட்டது. விழாவுக்கு முதல் நாள் புயல். விழா அன்று வானிலை பதற்றம் அளிப்பதாகவே இருந்தது. இந்தச் சூழ்நிலையில் இவ்விழாவைச் சீரும் சிறப்புமாக நடத்திக்காட்டிய 'அல்லிக்கேணி' நாவலாசிரியரும் ஸீரோ டிகிரி அதிபருமான ராம்ஜி பாராட்டுக்குரியவர். அந்தப் பதிப்பகத்தின் முதுகெலும்பாயும் மீகாமனாயும் செயல்பட்டுவரும் அன்புச் சகோதரி காயத்ரியின் முன்னெடுப்புகளும் அயர்விலா முயற்சிகளும் முன்னுதாரணங்களாக நிலைபெறும் தன்மை கொண்டவை.

விருது பெற்ற கலாப்ரியா வெள்ளை மனசுக்காரர்; 'சசி'வர்ணர்;'சசி'தரர். இந்த விழாவில் தொடக்கவுரை ஆற்ற என்னை அழைத்திருந்த ராம்ஜியின் மனசும் காயத்ரியின் மனசும் விசாலமானவை. அவர்கள் இருவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு எனது உரையைத் தொடங்கினேன். அந்த உரையின் எழுத்து வடிவமே இந்தக் கட்டுரை.

கலாப்ரியா, மரபில் வேர் பிடித்த செடி; அந்தச் செடியில் பூத்தவை நவீன மலர்கள். அவர் கவிதை எழுதத் தொடங்கிய காலத்திலிருந்து இன்றுவரை வள்ளுவ வாசனை வீசாத 'கலாப்ரியா கவிதைகளை' நாம் காண முடியவில்லை. சங்கக் கவிதை பிழிந்தெடுத்த சாறு அவரது மைக்கூட்டில் கலந்திருக்கிறது.

'உருள்பெருந்தேர்', 'மற்றாங்கே' போன்ற கட்டுரை / கவிதைத் தலைப்புகள் எல்லாம் வள்ளுவத்திலிருந்து எடுத்தாளப்பட்டவை. 'மற்றாங்கே' என்ற சொல்லுக்கு ஒரு பெரும் செறிவு உண்டு. அது மற்று, ஆங்கே என்ற இரு சொற்களின் இணைவு. மற்று என்ற சொல் பொருளற்ற அசைநிலையாகவும், பிறிது ஒன்றைச் சுட்டும் சொல்லாகவும், ஒரு நிகழ்வுக்கு நேர் எதிரான இன்னொரு நிகழ்வைத் தொடர்புபடுத்தும் சொல்லாகவும் பயன்பாடு உடையது.



திருக்குறளில் மற்று என்ற சொல்லை வள்ளுவர் நாற்பத்தொரு இடங்களில் பயன்படுத்தியிருக்கிறார். இதோ கலாப்ரியாவின் மற்றாங்கே கவிதை

மழை
உக்ரமாய்த் தகரத்தில் பெய்யும்
குச்சு வீட்டு
ஞாயிறுத் தாம்பத்யம்
நெருக்கம் காண.

தூங்கின
குழந்தை எழுந்து
விரைத்த குறியோடு
அரையிருளில்
அழும்

ஜன்னலைத் திறக்க
அப்பன் அனுமதியான்
அம்மை புணர்ச்சி
மறந்து
பிள்ளையை
முலைக்காய் கூப்பிட்டு
சுரப்பாள்

பௌருஷம்
முனகலுடன்
குப்புறப் படுக்கும்
வெளியே
ஜனங்களுக்கான
மழை
தகரத்தில்
உக்ரமாய்

ஒரு ஞாயிற்றுக்கிழமையில் சுகித்திருக்கும் கணவன் மனைவியின் தேகமெங்கும் அனல். வீட்டிற்கு வெளியில் மழை. அறைக்குள் தகிப்பு. அழுது எழும் குரலால் தாய்மை குழந்தையைத் தேடுகிறது. ஆண்மை குப்புறக் கவிழ்கிறது. வீட்டுக்குள் இணைவுக்கு இசைவாய் நின்ற மழை இறுதியில் வெளியே ஜனங்களுக்கான மழையாய் மாறி நிற்கிறது. இந்த எதிரெதிர் நிகழ்வுகளை, எதிரெதிர் உணர்வுகளை ஆழமாய்ப் பதிய வைக்கும் இந்தக் கவிதைக்கு 'மற்றாங்கே' என்ற பொருட்செறிவு மிக்க தலைப்பைத்தேர்ந்தெடுக்கிற கலாப்ரியாவை



மனமாரப் பாராட்டலாம்.

திராவிட இயக்க அரசியலில் கலாப்ரியா மூழ்கியிருந்த காலத்தில், அறிஞர் அண்ணாவின் மறைவு குறித்து ஓர் அஞ்சலிக் கவிதை எழுதியிருக்கிறார். அந்தக் கவிதையில் பாதிக்குப் பாதி வரிகள் வள்ளுவருடைய வாசகங்கள். 'சொலல்வல்லன்', 'சோர்விலன்','இணரூழ்த்தும் நாறா மலர்','பணியுமாம் என்றும் பெருமை', 'உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்' போன்றவை உதாரண வரிகள். வள்ளுவர் இன்று இருந்தால், அக்கவிதையின் காப்புரிமை கோரி அவர் வழக்குத் தொடர்ந்திருப்பார். அந்த அளவுக்கு வள்ளுவத்தை மூச்சு முட்டக் குடித்திருப்பவர் கலாப்ரியா. அவருடைய நவீன கவிதைகளின் உயிர்ப்பை அவரது மரபிலக்கியப் பயிற்சி கூர்தீட்டிக் கொடுத்திருப்பதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது.

கலாப்ரியாவிடம் ஒரு கேள்வி முன்வைக்கப்படுகிது. 'சங்க காலத்திலிருந்து தொடங்கி இரண்டாயிரம் ஆண்டு தமிழ்க்கவிதை பாரம்பரியம் நவீன கவிதைக்குத் தடையாக இருக்கிறதா?' என்பதுதான் அக்கேள்வி. அதற்கு, 'இல்லை, அது உதவியாகவே இருக்கிறது. நம் மரபிலும் நவீனத்திலும் என்னதான் இல்லை? எனது கவிதைகள் சமூகக் காட்சிகளால் அடுக்கப்பட்டவையே' என்று பதில் சொல்கிறார். சங்க இலக்கியம் முழுவதும் காட்சிகளின் தொகுப்பாகத்தானே இருக்கிறது. கலாப்ரியா காட்சிகளை மறைக்காமல், திரையிடாமல் மக்கள் மொழியில் அதனதன் கொதிநிலைகேற்பக் கவிதையாக்குகிறார்.

யாருக்காவது பரிசில் அளித்துப் படம்பிடித்துக்கொள்ளும் புகழ் விரும்பிகளைக் குறித்து எழுதியிருக்கும் கவிதையொன்றில் அத்தகைய வள்ளல்களை 'அறவிலை வணிகன்' என்றே எழுதுகிறார். 'பயன் எண்ணாது உழைக்கச் சொன்னாள்' என்கிறார் பாரதி. ஓர் அறச்செயலில் ஈடுபடுகிறவனுக்கு அதில் எவ்வித எதிர்பார்ப்பும் இருக்கக் கூடாது. இப்பிறவியில் செய்கிற அறச்செயல்கள் மறு பிறவியில் அல்லது விண்ணுலகில் நன்மை பயக்கும் என்று கருதி அறம் செய்கிறவனை 'அறவிலை வணிகன்' என்று குறிப்பிடுகிறது புறநானூறு 134ஆம் பாடல். இந்தச் சொல்லை நவீன கவிதைக்கு கொண்டு வருவதோடு அச்சொல்லுக்கு நிகராக 'சுயபாதுகாவலர்' என்ற புதுச் சொல்லையும் ஆக்கி அளிக்கிறார்.

'மறைந்து திரியும் நீரோடை' என்ற கட்டுரைத் தொகுப்பு கலாப்ரியாவின் மரபிலக்கிய அறிவுக்கும் பயிற்சிக்கும் ஒரு சான்றாவணம். நவீன மொழியின் கூர்மைக்கு மரபிலக்கியங்கள் சாணை தீட்டிக் கொடுக்கும் என்று சொல்லாமல் சொல்கிறது 'மறைந்து திரியும் நீரோடை'. ஆனால், நவீன கவிஞர்களால் அள்ளிப்பருகாமலும் ஆவலோடு நீந்தாமலும் மறைந்தே இருக்கிறது இந்த நீரோடை.

கலாப்ரியாவும் வண்ணதாசனும் திருநெல்வேலி சுடலைமாடன் தெருவில் வசித்தவர்கள். இந்திய இலக்கியத்தில் சுடலைமாடன் தெருவுக்கு ஒரு சிறப்பும் பெருமையும் உண்டு. இந்தத் தெருவில் இலக்கம் 21E இல் வாழ்ந்த தி.க.சியும் அவரது மகன் வண்ணதாசனும் சாகித்ய அகாடெமி விருது பெற்றவர்கள். தந்தையும் மகனும் சாகித்ய அகாடெமி விருது வாங்கிய பெருமையும் தமிழுக்கே சாத்தியமாகி யிருக்கிறது. கலாப்ரியாவுக்கு இந்த விருது கிடைத்தால் சுடலைமாடன் தெருவுக்கு 'சாகித்ய வீதி' என்று பெயரிடலாம்.

வண்ணதாசன் வீட்டுக்கு எதிர் சாரியில் வாழ்ந்தவர், தி.க.சியின் நிழலில் வண்ணதாசனின் அரவணைப்பில் வளர்ந்தவர் கலாப்ரியா. "வண்ணதாசனைப் பார்த்துப் பார்த்து வளர்ந்தவன் நான். எனது பெரும்பாலான ரகசியங்களை அறிந்தவர் அவர். நான் ஏதாவது சிறுபிள்ளைத்தனமாகப் பீற்றிக்கொண்டால் அவர் எனக்கு வண்ணநிலவனைச் சுட்டிக்காட்டுவார். 'பார், ராமச்சந்திரன் எவ்வளவோ சாதித்திருக்கிறார். நீயோ நானோ அவருடைய திசையில் பத்தடிகூட நடக்கவில்லை. கொஞ்சம் அடங்கு' என்று இடித்துரைப்பார், ஒரு மந்திரி போல" என்று வண்ணதாசனைத் தனது ஆசானாக, வழிகாட்டியாகப் பதிவு செய்துள்ளார் கலாப்ரியா.

வண்ணதாசன் என்கிற கவிஞர் கல்யாணியைப் பார்த்துப் பார்த்து மட்டுமல்ல, படித்துப் படித்து வளர்ந்தவராகவும் தென்படுகிறார் கவிஞர் கலாப்ரியா.

கல்யாண்ஜியின் ஆரம்பகாலக் கவிதையிது:

கருப்பு வளையல்
கையுடன் ஒருத்தி
குனிந்து
வளைந்து
பெருக்கிப் போனாள்
வாசல் சுத்தமாச்சு
மனசு குப்பையாச்சு

கவிஞர் கலாப்ரியாவின் 'வெள்ளம்' என்ற கவிதை அண்ணன் கல்யாண்ஜி வரைந்த கோலத்திற்கு மறு உருவம் கொடுக்கிறது.

விடியலில்
வாசலில்
குனிந்து கோலமிடுமவள்
நெஞ்சில் இரு
மஞ்சள் தாமரைகள்
பூத்தன
சூரியனாய்ச் சுடும்
முன் நிமிர்ந்தாள்
நான் சொன்னேன்
இனி பெரிய கோலமாய்ப்
போடப் பழகேன்

தி.க.சி.யின் வீடான 'அன்பகம்' கலாப்ரியாவுக்கு ஓர் இலக்கியப் பயிற்சி மையமாகவே இருந்து வந்திருக்கிறது. ஆனால், கி.ரா தான் கலாப்ரியாவை முதன்முதலாகக் கவிதை எழுதச் சொன்னவர். கவிதையில் கதை மாதிரி எழுதச் சொன்னவரும் அவரே.

மூன்றெழுதில் என் மூச்சிருக்கும் என்று பாடிய எம்ஜிஆரின் ரசிகர் கலாப்ரியா. ஆனால், கலாப்ரியாவின் மூச்சு இரண்டெழுத்தில்தான் இருந்து வருகிறது. பள்ளிப் பருவத்தில் 'மைனாக்குஞ்சு' என்று அழைக்கப்பட்டு வந்த கலாப்ரியாவுக்கு 'சசி' என்ற ஈரெழுத்து அவரது ஜீவாதாரமாகவும் கவிதாசாரமாகவும் நீடித்து வருகிறது. காலம் எல்லாவற்றையும் மறக்க வைத்தது, அவரது ராட்'சசி'யைத் தவிர. தற்கொலைக்கு ஆட்பட்ட இந்தக் கவிஞனின் மரண மயக்கத்திலும் சசியே கனவில் வந்தாள். பாரதிக்கு ஏற்பட்ட சிறுவயது காதல் போலத்தான் கலாப்ரியாவின் காதலும் மோகமும். 'உலகமே அந்தப் பெண்ணாய் உருவெடுத்தது அந்த நாலாங்கிளாசிலேதான்' என்று இடையிடையே வாக்குமூலம் தந்திருக்கிறார் இந்த இடைகால்காரர். 'சசி' என்ற சொல்லுக்குரிய உருவமும் உருவகமும் கலாப்ரியாவின் கவிதைக்கான எரிபொருள்; ஊது உலைத்துருத்தி. இந்த எரிபொருள் பற்றி எரிந்தது ஒரு வகுப்பறையில்தான்.

பால்துரை என்ற ஆசிரியர் வகுப்பறையில் ஒரு கேள்வி கேட்கிறார். செம்மண்ணில் என்ன சத்து இருக்கிறது? என்று. கலாப்ரியா மட்டும் 'இரும்புச் சத்து' என்று சரியாகப் பதில் சொல்கிறார். வேறு எவரும் பதில் சொல்லவில்லை. எல்லா மாணவர்களுக்கும் குட்டு வைக்கும்படி கலாப்ரியாவுக்கு உத்தரவாகிறது. ஒவ்வொருவர் தலையிலும் குட்டு வைத்து வந்த கலாப்ரியா சசியிடம் வந்தபோது அவள் அழத் தொடங்குகிறாள். அவளைக் குட்டுவதுபோல பாவனை செய்கிறார். 'ஏலே நல்லா குட்டுல' என்கிறார் வாத்தியார். சசியைக் குட்ட மனம் வருமா! அன்பெனும் பிடியில் அகப்பட்ட நிலையைக் கவிஞர் சொல்கிறார்: "அவளது அழுகையின் ஊடே கண்ணில் லேசான அன்பு துளிர்த்திருந்தது. மங்கலான அந்தப் ப்ரகாசம்தான் என் கவிதைகளின் ஆரம்ப ஊற்று. அந்த நீறுபூத்த நெருப்புதான் என் கவிமொழி போலும். அந்த எட்டு வயது ஈர்ப்புக்கு என்ன பெயர்? அது இந்த 65 வயதிலும் புரியவில்லை". எட்டயபுரத்துக் கவிஞனுக்கு மட்டுமல்ல, 'எட்டயபுரம்' எழுதிய கவிஞனுக்கும் அந்தச் சிறுபிராயத்து' காதலை மறக்க முடியவில்லை. 'காதலுற்ற மானுடன் கவிஞன் ஆகிறான்' என்ற பாரதி வரியையும் 'அடைய முடியாப் பொருளின் மீது ஆசை தீராது, அபிமானம் மாறாது' என்ற தேவதாஸ் படப் பாடலையும் மீண்டும் மீண்டும் அவரது படைப்புகளில் எழுதிச் செல்கிறார் கலாப்ரியா.

கல்லூரியில் காலடி எடுத்துவைத்த காலத்திலிருந்தே தனது குடும்ப நிலைகுலைவை ஒரு செயலற்ற இளைஞனாக மட்டுமே அவரால் பார்க்க முடிகிறது. அப்பா நடத்தி வந்த திருநெல்வேலி டெய்லரிங் ஹவுஸ் மூடப்படுகிறது. அதில் எஞ்சிய ஜெர்மன் கத்தரிக்கோலை 121 ரூபாய்க்கு விற்றுத்தான் மேல்படிப்புக்கான கல்லூரிக் கட்டணத்தைக் கட்ட முடிகிறது. சகோதரியின் ஹார்மோனியமும் விற்கப்படுகிறது. வீட்டிலுள்ள எல்லாப் பொருட்களும் ஒவ்வொன்றாய் விலையாகி வெளியேறுகின்றன. வாழ்ந்த குடும்பத்தின் வீழ்ச்சியில் கலங்கி நின்ற கலாப்ரியாவுக்குத் தன்னைக் கரைத்துக் கொள்ளவும் காத்துக்கொள்ளவும் சசியும் சசி நினைவுகளும் தொடர்ந்துவந்தன. 'சசி' என்ற நினைவு, கவிமனத்திற்கு உத்வேகம் கூட்டியது; அவரது துயரம் தோய்ந்த கவிதைகளுக்கு இசையூட்டியது. துயரத்தில் தோய்வதும் அந்த மன இறுக்கத்தையே தனது கவிதைக்கான மூலப்பொருளாகக் கொள்வதும் அவரது இயல்பாகிவிட்டது என்று நினைக்கத் தோன்றுகிறது.

அவர் சொல்கிறார்: 'ஒரு களிமண் அழகாக உருவாக்கப்பட்டு பின் அதுவே காலடியில் போட்டு மிதித்து நசுக்கப்பட்டது. எது உருவாக்கியதோ அதுவே அழித்தது. ஆக்கி அழித்த சக்தியை விட முடியவில்லை. எல்லா நிகழ்வுகளுக்கும் அதுவே மொத்த உருவகமாக இருந்தது".

இழந்த சொர்க்கம் மீண்டதுபோல சசி மீண்டும் கலாப்ரியாவின் வாழ்வில் தோன்றுகிறாள். '1968 நவம்பர் மாதம் கார்த்திகை மாசப்பிறப்பன்று சசி வந்தாள் - காதல் மறு உதயமாயிற்று' என்று தன் மீண்ட காதலைத் துல்லியமாக நினைவில் வைத்திருக்கிறார்.

கல்லூரி நாட்களில் கவிதையும் காதலும் என்று வாழ்ந்த கலாப்ரியாவை அரசியலும் சினிமாவும் ஆக்கிரமித்தன. எம்ஜிஆர் மன்றம் நடத்தி தீவிர எம்ஜிஆர் ரசிகராக இருந்த கலாப்ரியா, திமுகவின் களப்பணியாளராகச் செயல்பட்டிருக்கிறார். கலாப்ரியாவின் சினிமா நினைவுகளுக்கு எல்லையே இல்லை. அவை குறித்துப் பேச நேரம் போதாது.

கலாப்ரியாவின் கவிதையும் வாழ்வும் ஒரு கருப்பு வெள்ளைப் படத்தைப் பார்ப்பது போலவும் ஒரு விமானத்தின் 'ப்ளாக் பாக்ஸை' பார்ப்பது போலவும் எனக்குத் தோன்றுகிறது. சென்றுபோன நாட்களின் நினைவுகளை, துயரத்தை, காதலை, வாழ்வைப் பேசுகிறார் என்றுகூடச் சொல்லலாம்.

இலக்கணத்தில் வரும் இறந்தகாலம் கூட மரித்த காலம் அல்ல. காலம் எப்படிச் சாகும்? இறந்த காலம் என்பது கடந்த காலம். 'சொல்லிறந்த தொன்மை' என்பது தமிழ் வாசகம். அது சொல்லைக் கடந்த தொன்மை. கலாப்ரியா தொன்மையில் சொல்லைக் கடந்து நிற்கிறார். Kalapriya is a transcending poet.

கலாப்ரியாவின் மொழியில் அலங்காரமில்லை; அழகு மிளிர்கிறது. நிர்வாணமிருக்கிறது; ஆபாசமில்லை. வெப்பமூட்டும் காட்சிகளும் உணர்வுகளும் சிறை பெறா நீர் போலத் தடையின்றித் ததும்புகின்றன. ஆனால், 'அவரது தமிழ்' அவற்றைத் தணித்து இதமாக்கிவிடுகிறது. வெம்மையில் செம்மை கண்டவர் கலாப்ரியா. உதாரணத்திற்குக் கலாப்ரியாவின் உரைநடையிலிருந்து ஒரு வரி:

> (அவள்) சேலை முந்தானையால் முகம், உடல், முன்கை எல்லாம் துடைக்கும்போது அடிவயிற்றில் இறங்கும் மயிரொழுங்கு பொருநராற்றுப்படையின் விறலியை, யாழ் வருணனையை நினைவுறுத்தியது. கொஞ்சம் கிளர்ச்சியுடன் வெளியே வந்தேன்.

அடிவயிற்றில் இறங்கும் மயிரொழுங்கைத்தான் கவிஞர் ஞானக்கூத்தன் 'ரோமபந்தி' என்று தனது கவிதையில் குறிப்பிடுகிறார். 'ரோமபந்தி' குற்றாலக் குறவஞ்சியில் இடம் பெற்றுள்ள சொல்.

அசிங்கங்களுக்கான அழகான கவிதை எழுதிய கலாப்ரியா ரோமபந்தி என்று எழுதாமல் அடிவயிற்றிலிருந்து இறங்கும் மயிரொழுங்கு என்று எழுதிக் காட்டியவர். ஞாயிற்றுக்கிழமை தாம்பத்தியத்தையும் மன விகாரங்களையும் புனிதங்களை உடைத்து அழகியலுக்கு பங்கமின்றி அம்பலம் ஏற்றியவர்.

ஆதலால் சொல்கிறேன் நவீன கவிதையில் கலாப்ரியா ஒரு திசைமாற்றி. முன் உதாரணங்களையும் பொன் உதாரணங்களையும் புறந்தள்ளியவர். Kalapriya is a paradigm shift in Modern Tamil Poetry.

I.A.Richards எழுதியுள்ள Internal colloquies என்ற கவிதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ள ஒரு கவிதை இப்படித் துவங்குகிறது: 'No Court No rules / No Nets No Score.'

இந்த இரண்டு வரிகளே போதும், கலாப்ரியாவின் வாழ்வையும் படைப்பையும் விண்டு சொல்ல. அவரது ஆரம்பகால வாழ்வின் தாழ்ச்சியும் வீழ்ச்சியும் அவற்றின் தழும்புகளும் அவரின் உட்குரலின் ஓசையில் ஒளிந்து கொண்டிருக்கின்றன. அதனால்தான் 'பாராட்டை மட்டுமே விரும்புகிற சாதாரண மனிதன் நான்' என்று சொல்கிறார்.

வாழ்நாள் சாதனையாளர் விருதுபெறும் கலாப்ரியாவைப் பாராட்டுவோம். அவருக்குத் துணை நிற்கும் அவரது துணைவியார் 'டீச்சரையும்' பாராட்டுவோம்.

(தொடரும்)

**சந்தியா நடராஜன்**

<sandhyapathippagam@gmail.com>

# ரெவின்யு ஸ்டாம்பு

**விட்டல்ராவ்**

நான் சொற்ப நாட்கள் எக்ஸ்ரே வேலையும், சொற்ப நாட்கள் மின்சார வினியோக தனியார் நிறுவனம் ஒன்றில் என்று பணிபுரிந்தபோதும் பிறகு தொலைப்பேசி இலாகாவில் சேர்ந்து பணியாற்றியபோதும், அந்தந்த இடங்களிலேயே சம்பளம் மற்றும் பிற பணப்பட்டுவாடாக்கள் செய்யப்பட்டன. ஒரு சிறு காலகட்டத்தில் ஊதியம், மருத்துவச் செலவுத் தொகை, ஓவர்டைம் படி என்ற பல்வேறு பணப்பட்டுவாடாக்களும் தபால் அலுவலகத்துக்கு மணியார்டர் செய்யப்பட்டு எங்களுக்கு வினியோகிக்கப்பட்டது. இது சென்னை நகராட்சி எல்லைக்கு அப்பால் இடம்பெற்றிருந்த புற நகர்ப் பகுதியைச் சேர்ந்த தொலைப்பேசி தொடர்பகங்களில் நடந்து வந்தது. அன்றைக்கு கிண்டி வரைதான் நகராட்சி எல்லை. கிண்டிக்கு அப்பாலுள்ள பரங்கிமலை, குரோம்பேட்டை மற்றும் பிற புறநகர்ப் பகுதிகளிலுள்ள ரெட் ஹில்ஸ், அம்பத்தூர், பூந்தமல்லி ஆகிய இடங்களிலிருந்த தொலைப்பேசி இணைப்பகங்களிலுள்ள ஊழியர்கள் புற நகர்ப் பகுதி ஊழியர்களாய் கணக்கிலெடுத்துக் கொள்ளப்பட்டனர். நகரிலுள்ள எக்ஸ்சேஞ்சுகளுக்கு இலாகா வண்டியிலேயே (van) ஆயுதமேந்திய காவலர் துணையுடன் பணம், சம்பளப் பட்டியல்களோடு ஊழியர்கள் எங்கள் ‘காஷ்’ பிரிவிலிருந்து ஒவ்வொரு எக்ஸ்சேஞ்சுக்கும் வந்து கொடுத்துவிட்டுப் போவார்கள். எல்லோரும் தங்கள் பெயருக்கு நேரே ‘அக்விட்டென்ஸ்’-இல் ரெவென்யு ஸ்டாம்ப் ஒட்டி கையெழுத்திட்டு பணம் பெறுவார்கள். ஆனால், புறநகர்ப் பகுதிகளில் அமைந்துள்ள டெலிபோன் எக்ஸ்ஸேஞ்சுகளுக்கு இப்படி வண்டியில் கொண்டு வந்து ஊதியம் முதலான பணத்தை வினியோகிக்கமாட்டார்கள். மணியார்டர் மூலமாய் அனுப்பி, அதை தபால்காரர்தான் கொண்டு வந்து வினியோகிப்பார். இது பல வருடங்களாய் இருந்து வந்து, 80-களில் மாறியது. புறநகர் எக்ஸ்சேஞ்சுகளில் பணிபுரியும் ஊழியர்களுக்கும் இலாகா வண்டியிலேயே பணமனுப்பி வழங்குவதென்றாயிற்று.



மணியார்ட் மூலம் தொலைப்பேசி ஊழியர்-களுக்குத் தபால்காரர் வந்து சம்பளம் வழங்குவது ஆச்சரியமாயும் இருந்தது என்றாலும் சௌகரியங்களையும் உள்ளிட்டதாயிருந்தது. ஒரு செயலைக் குறித்து ஆச்சரியம் கொள்ளுவதென்பது அவரவர் மனப்பாங்கைப் பொறுத்தது. அகம் சார்ந்து வருவது. சௌகரியம் வெகுஜன ரீதியான - எல்லோருக்குமான - முதலில் புறம் சார்ந்து வருவது. அடுத்து அகம் சார்ந்ததாயும் விரிவடையக்கூடியது. அன்றைக்குத் தொலைப்பேசித் துறை என்பது தபால் தந்தித் துறையுடன் இணைந்திருந்தது. தபால்காரரால் மணியார்டர் மூலம் மாதா மாதம் தொலைப்பேசி ஊழியர்கள் தம் சம்பளம் முதலான பணப்பட்டுவாடாவைப் பெறுவதில் தபால் துறையுடனான சொந்த பந்தமும் உறவும் கூடுதல் நெருக்கம் கொண்டிருந்தது. தொழிற்சங்க நடவடிக்கைகளின் போது தபால் துறை ஊழியர்கள் தொலைப்பேசித் தொழிலாளர்களின் பிரச்சினைகளை தமதாகக்கருதிக்கைகோர்த்துபெருமளவில் வந்திருந்துகோஷமெழுப்பியிருக்கிறார்கள். சென்னைத் தொலைப்பேசி பொறியியல் ஊழியர்களின் தொழிற்சங்க சம்மேளன மாநாடுகளின் ஞானய்யா, பிரேமநாதன் ஆகியோர் நெருக்கமாய் உடனிருந்து தோழமையுடன் செயலாற்றியவர்கள்.




நகர்ப்புறஎக்ஸ்சேஞ்சுகளில்இருந்தபோதுசம்பளம் முதலான பணப்பட்டுவாடாக்கள் மதியம் மூன்று மணிக்கு மேல் நடக்கும். காலை ஷிப்டு முடிந்தவர்கள் அதற்காக நான்கு மணி வரை தேவுடு காக்கவேண்டும். சம்பளப் பட்டியலில் ஊழியர்களின் பெயர்களை அடுத்து மொத்த தொகையும் குறிக்கப்பட்டு, அடுத்து அவர்கள் வாங்கியிருக்கும் நானாவித அட்வான்சுகள். கடன்களுக்கான விவரம், மொத்த பிடித்தல் போக வீட்டுக்கு எடுத்துச் செல்லக்கூடிய சம்பளம் இவ்வளவு என்றிருக்கும். தொலைப்பேசி ஊழியர்களின் சம்பள பட்டுவாடாவை வைத்துச் சொன்னால், 3ஆம் வகுப்பு 4ஆம் வகுப்பு ஊழியர்களில் சிலருக்கு அவர்கள் - இலாகா அனுமதித்திருந்த பண்டிகை அட்வான்சு, வெள்ள நிவாரணம் வறட்சி நிவாரண அட்வான்சுகள், சைக்கிள் அட்வான்சு, மின் விசிறி அட்வான்சு, வானொலி அட்வான்சு, கடன்கார சொசைட்டி கடன் பிடித்தங்கள் என்று பல்வேறு பிடித்தங்கள் போக நிகர ஊதியமாய் வீட்டுக்கு எடுத்துச் செல்ல ஒன்றுமே மிஞ்சியிருக்காது. ஆனாலும் அந்த ஊழியர் தம் பெயருக்கு எதிரே இந்த விவரங்கள் குறிக்கப்பட்ட பட்டியலின் முடிவில் 'NILLSALARY' என்ற வாசகத்துக்குப் பக்கமாய் 'ரெவின்யு ஸ்டாம்பு' ஒட்டி கையெழுத்திட்டாக வேண்டும். ஒரு ரூபாய் முகமதிப்பு கொண்ட ரெவின்யு ஸ்டாம்பின் (இளஞ்சிவப்பு நிறம்) மையத்தில் அசோக சக்கரம் காணப்படும்.

தபால்காரரால் மணியார்டர் மூலம், சம்பளமும் இதர பணப்பட்டுவாடாக்களும் நடந்துவந்த காலத்தில் பரங்கி மலை தொலைப்பேசி எக்ஸ்சேஞ்சையடுத்தே இருந்தது பரங்கிமலை தலைமைத் தபால் அலுவலகம். எங்கள் பூக்கடை தலைமை அலுவலகத்திலுள்ள காசாளர் பகுதியிலிருந்து காலையிலேயே எங்கள் எக்ஸ்சேஞ்சின் தோட்டி முதல் தொண்டைமான் வரையுள்ள சகல சிப்பந்திகளுக்கும் தனித்தனியாக மணியார்டர் படிவத்தில் விவரங்களோடு பூர்த்தி செய்யப்பட்டு பணம் தபாலாபீசுக்கு வந்து விடும். காலையில் ஒன்பது, பத்து மணிக்கே போய் நின்றாலும் ஆசாமியைக் குறிப்பிட்ட தபால்காரர் தெரிந்திருந்தால் சம்பளம் கொடுத்து விடுவார். மணியார்டர் படிவத்தின் அடியிலுள்ள சிறிய அக்னாலட்ஜ்மெண்ட் பகுதியில் சம்பளம், பிடித்தங்களின் விவரம் இருக்கும். அதைக் கிழித்துக் கொடுத்துவிடுவார். இவ்விதமாய்

மணியார்டர் வழியே பெற்று வந்த சம்பளத்துக்காக யாரும் 'ரெவின்யு ஸ்டாம்பு' ஒட்டவே தேவையில்லை.

சமயத்தில் 'ரெவின்யு ஸ்டாம்பு' கிடைப்பது அரிதாகிவிடும். பல சந்தர்ப்பங்களில் அந்த 'ஸ்டாம்பு' தபால் அலுவலகத்திலேயே கிடைக்காது. அதனால் எந்தப் பணப்பட்டுவாடாவும் நடப்பது கஷ்டம். சம்பளம் வாங்குவதற்காக மூன்று நான்கு தபால் நிலையங்களுக்குச் சைக்கிளில் அலைந்திருக்கிறேன். பீடி, சிகிரெட், வெற்றிலைபாக்கு பெட்டிக்கடைகள் சிலவற்றில் அஞ்சலட்டையும் 'ரெவின்யு ஸ்டாம்பு'ம் விற்பார்கள். அந்தக் கடைக்காரர் ஒரு ரூபாய் ரெவின்யு ஸ்டாம்பை ஒண்ணேகால் ரூபாய்க்கு விற்பார். இந்த வியாபாரம் சூடுபிடிக்கவும், கடைக்காரர்கள் தபாலாபீசுகளில் 'ரெவின்யு ஸ்டாம்பு'களை மொத்தமாக (BULK PURCHASE) வாங்கிக்கொண்டு போய்விடவும், பொதுமக்களுக்கு 'ரெவின்யு ஸ்டாம்பு' தட்டுப்பாடு ஏற்பட்டது. இலாகா ரீதியான எவ்வித காரணமும் இந்தத் தட்டுப்பாட்டுக்கு இல்லை. இதைப் புரிந்துகொண்ட தொலைப்பேசி ஊழியர்களில் பலரும் கிடைக்கும் போதெல்லாம் பத்து இருபதென்று 'ரெவின்யு ஸ்டாம்பு'களை வாங்கி வைத்துக்கொண்டனர். இதை உத்தேசித்து தொலைப்பேசி இலாகாவின் தலைமை அலுவலகம், தானே ரெவின்யு ஸ்டாம்பை மொத்தமாய் வாங்கி வைத்து சம்பளம், ஓவர் டைம் முதலான பட்டியல்களில் ஊழியரின் பெயருக்கு நேரே 'ஸ்டாம்பு' ஒட்டவேண்டிய இடத்தில் ஒட்டி, அனுப்பத் தொடங்கியது. பணம் வாங்கும் போது ஸ்டாம்புக்கான காசை வாங்கிக் கொண்டது.

இது இவ்வாறு ஏற்படும்முன், புறநகர்ப் பகுதிகளில் நானாவித பணப்பட்டுவாடாக்களும் மணியார்டர் வழியே தொலைப்பேசி ஊழியர்களுக்கு நடத்தப்படுகையில், இரண்டு தபால்காரர்கள் அதை ஏற்றுக்கொள்ளுவார்கள். இவர்களில் ஒருவர் வயதிலும் அனுபவத்திலும் சரிவீஸிலும் மூத்தவராய், 'செலக்ஷன் கிரேடு' போஸ்ட்மேனாக இருப்பார். பத்து, பதினாறு மணிக்கெல்லாம் தொலைப்பேசி இணைப்பகத்துக்கு வந்து அமர்ந்து சம்பளப் பட்டுவாடா செய்யத் தொடங்கிவிடுவார்கள். மணியார்டர் வழியாகச் சம்பளம் முதலானவற்றை வாங்கிக்கொண்டிருந்த காலத்தில் ரெவின்யு ஸ்டாம்பின் அவசியமுமில்லை. தட்டுப்பாடும் தெரிய வரவில்லை. இதனால் மணியார்டர் வழி பணப்பட்டுவாடா பேரிலும், தபால்காரர் மீது கூடுதல் பந்தம், பாசம், அன்பு, மரியாதையெல்லாம் ஏற்பட்டு நிலவியது. அவர்களை வெளியே எதிர்கொள்ளும் போதெல்லாம் தாமாக இயல்பாக ஒரு "ஹலோ" சொல்லி கைகுலுக்கி தேநீருக்கு அழைக்கும் அளவுக்கு விரிவடைந்திருந்தது. சம்பளத்தை எண்ணி வாங்கிக்கொண்ட வேகத்திலேயே ஒரு ரூபா நாணயத்தை ஊழியர்கள் ஒவ்வொருவரும் தவறாது தபால்காரரின் மேஜையில் வைத்து விட்டுப் போவதென்பது ஒரு மரியாதையாக வளர்ந்தது. 'ரெவின்யு ஸ்டாம்பு' ஒட்டவேண்டிய அவசியம் மணியர்டருக்கு இல்லையென்றாலும் தபால் ஊழியருக்கு அன்புக் காணிக்கை ரூபத்தில் அது போய்கொண்டிருந்தது. ஆனால், முன்னதில் உணரப்பட்ட சலிப்பும் அலைச்சலும் பின்னதில் இல்லவே இல்லை.

இந்த மணியார்டர் வழி சம்பளப்பட்டுவாடா நடந்த சமயம் பரங்கிமலை தலைமைத் தபால் நிலையத்திலிருந்து வினியோகிக்க வந்துகொண்டிருந்த மூத்த தபால்காரரை மறக்கவே முடியாது. தொலைப்பேசி ஊழியர் ஒவ்வொருவரின் பெயரையும் நினைவில் வைத்துக்கொண்டு, அன்போடு பெயர் சொல்லிக் கூப்பிடுவார். ஒரு சிலர் அவர் மீதான நம்பிக்கையில் வாங்கிய பணத்தை அப்படியே ஜேபியில் வைக்கப்போனால், அவர் சொல்லுவார், "எண்ணிப்பாத்துக்கங்க சார்" என்று. அவர் பெயர் கண்ணப்பன். அவரது தபால்கார காக்கி கதர் சீருடை கஞ்சி போட்டு கத்தி கூர்மையாய் இஸ்திரி போடப்பட்டு விரைத்திருக்கும். கருத்து பளிச்சென்ற மேனியில் கூரிய பார்வை. சிறிய, சிவப்பு நிற பாட்சில் பித்தளை எழுத்துக்களாலான 'P&T DPT' என்ற பளபளக்கும் சின்னத்தை கைகளுக்கு மேல் இருபுறமும் சட்டையில் குத்திக் கொண்டிருப்பார். சில நாட்களில் நான் அவரைத் தேடி காலை பத்து மணிக்கே அவரது இருக்கைக்குப் போயிருக்கிறேன். பதினாறு மணிக்குத்தான் அவர் எக்ஸ்சேஞ்சுக்கு வருவார். பத்து மணிக்கு என்னைக் கண்டதும் என் மணியார்டர் பாரத்தை எடுத்துத் தந்து கையெழுத்துப் போட்டதும் பணத்தை புன்னகை நெளிய எண்ணித் தந்திடுவார்.

ஒரு சமயம் குடும்பத்தோடு சேலத்துக்குப் போய் விட்டுத் திரும்பி வருகையில் முன்பதிவு செய்யாமல் ஏற்காடு எக்ஸ்பிரஸ் ரயிலில் ஏறிவிட்டேன். நான், என் மனைவி, மகன். முன்பதிவு செய்யப்படாத பெட்டியாதலால் ஏகக்கூட்டம். என் மனைவிக்கு மட்டும் உட்கார நானும் என் மகளும் இடம் தேடியலைகையில், "இங்க வாங்கம்மா" என்ற குரல் கேட்டு நானும் என் மகளும் திரும்பினோம். மூத்த தபால்காரர் கண்ணப்பன் தன் குடும்பத்தோடு ஒரு பெஞ்சைப் பிடித்து உட்கார்ந்திருந்தார். கண்ணப்பன் எழுந்து நின்றுகொண்டு மனைவியையும் தம் மக்களையும் தள்ளி உட்காரச் சொல்லி என் மனைவியையும் மகளும் உட்காரச் செய்துவிட்டு என்னோடு தாமும் நின்றபடி பேசிக்கொண்டு வந்தார். இச் செயலைப் பார்த்துக்கொண்டிருந்த எதிர் பெஞ்சுக்காரர்களும் தள்ளி உட்கார்ந்து என்னையும் கண்ணப்பனையும் அமர உதவினர். சென்ட்ரல் வரை நாங்கள் உரையாடிக் கொண்டே வந்தோம்.

"சேலத்துக்கு போயிருந்தீங்களா?" என்று கேட்டேன்.

"ஆமா, ஒரு கல்யாணம்", என்றார்.

நான் மௌனமாயிருக்க அவரே சொன்னார்: "நடிகர் எம்.ஆர். ராதா உறவுக்காரங்க கல்யாணம்."

"உங்களுக்கு வேண்டியவங்களா?"

"உறவுதான். எம்.ஆர். ராதா எனக்கு நெருங்கின சொந்தம்", என்றார் கண்ணப்பன்.

புறநகர்ப் பகுதிகளில் அமைந்துள்ள எல்லா தொலைப்பேசி இணைப்பகங்களும் நகரத்துள் எக்ஸ்சேஞ்சுகளைப் போலவே வேனில் கொண்டு வந்து சம்பளம் முதலான பணப்பட்டுவாடாக்களை வினியோகிக்க வேண்டுமென்ற கோரிக்கை தொழிற்சங்கத்தால் தொலைப்பேசி இலாகா மேலாளரிடம் வைக்கப்பட்டு வந்த ஒன்று. ஒரு நாள் அது கவனிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு ஆவன செய்யப்பட்டும் விட்டது. மறு மாதத்திலிருந்து ஊழியருக்கான சம்பளமும் ஓவர்டைம் பணமும் மட்டும் வண்டியில் கொண்டு வந்து வினியோகிக்கப்படும் என்றும் மற்ற பணப்பட்டுவாடாக்களை காசாளர் இடத்துக்கே சென்று பெற்றுக்கொள்ளலாம் என்றும் அறிவிப்புச் சுற்றறிக்கை வந்துவிட்டது.

அதே சமயம், "ம், மறுபடியும் 'ரெவின்யு ஸ்டாம்பு' ஒட்டியாகணும்" என்றும் நினைவு படுத்திக்கொண்டார்.

இந்த 'ரெவின்யு ஸ்டாம்பு' எல்லா பணப்பட்டுவாடாவுக்கும் ஒட்டப்பட்டு வந்தது. திடீர் திடீரென்று இந்த 'ரெவின்யு ஸ்டாம்பு' கிடைக்காமல் போய் ஊழியர்களைத் திண்டாட்டத்தில் விட்டு விடும்.

சின்ன வயதில் தபால் தலை சேகரிக்கும் ஆர்வம் மேலிட்டபோது, மேட்டூர் அணையில் அரசுப் பள்ளியில் ஐந்தாம் வகுப்பு படித்த சமயம். பக்கத்திலேயே HED (HYDRO ELECTRICITY DEPARTMENT) அலுவலகம் இருந்தது. சரியாகப் பகல் பதினோர் மணிக்கு அந்த அலுவலகம் தனக்கு வந்திருக்கும் தபால்களைப் பிரித்து பெரிய பள்ளமொன்றில் கொட்டும். அந்த நூற்றுக்கணக்கான உறைகளில் ஏராளமாய் விதவிதமான தபால் தலைகள் ஒட்டப்பட்டிருக்கும் 1949-ல் இந்திய அரசு தேசிய ஒருமைப்பாட்டையும் தேசிய உணர்வை வரலாற்றுச் சின்னங்கள் வாயிலாக மக்களுக்குத் தெரிவித்து உணர வைக்கும் நோக்கில் இந்தியத் தொல்லியல் துறை சிறப்புத் தபால் தலைகள் பதினாறை அன்றைய மூன்று பைசாவிலிருந்து பதினைந்து ரூபாய் வரை முக மதிப்புள்ள தபால் தலைகளை வெளியிட்டது. அஜந்தா, எல்லோரா, கொனாரக், மகாபலிபுரம், கஜீராஹோ, நடராஜர், போதித்துவர், குதுப்பினார், கோல்கும்பஸ், தாஜ்மஹால் என்று வரலாறு மற்றும் தொல்லியல் சிறப்புமிக்க சின்னங்களின் படங்கள் கொண்ட தபால் தலைகள் அவை. பள்ளி மாணவர்களிடையே அவை பிரபலமடைந்தன. அவற்றைச் சேகரிக்க நாங்கள் உணவு இடைவேளையின்போது அங்கு ஓடி விடுவோம். வகுப்பில் காசை சுண்டிப் போட்டு பொம்மையா - கப்பையா கேட்டு ஸ்டாம்ப்களை கொடுத்து வாங்கி விளையாடுவோம். அப்போது ரெவின்யு ஸ்டாம்புகளும் வந்துவிடும். ஆனால், பையன்கள் "இது செல்லாத 'ஸ்டாம்பு' இதை வாங்க மாட்டோம்", என்று ரெவின்யு ஸ்டாம்பை நிராகரிப்பார்கள். பையன்களுக்கு 'ரெவின்யு ஸ்டாம்பு'கள் மற்ற ஸ்டாம்புகள் போல அல்ல, வேறெதோ என்று மாத்திரம் புரிந்தது. நான் என் தந்தையிடம் அதைக் காட்டி கேட்டபோது, அவர் அது என்ன, ஏது, எதற்காக ஒட்டப்படுகிறது என்பதையெல்லாம் பாடம் எடுத்தார்.

ஒரு ரூபாய் மதிப்புள்ள 'ரெவின்யு ஸ்டாம்பு'க்கு தட்டுப்பாடு வரும்போதெல்லாம் தபால் துறை பத்து பைசா மதிப்புள்ள 'ரெவின்யு ஸ்டாம்பு'களை விற்று வந்தது. இது இன்னும் கொடுமை. ஒரு ரூபாய் ஸ்டாம்பை ஒட்டவேண்டிய இடம் சிறியது. ஒரு ரூபாய்க்கு பத்து பைசா 'ரெவின்யு ஸ்டாம்பு'கள் பத்தை ஒட்டிக் கையெழுத்திடலாமென்று தொலைப்பேசித் துறை அனுமதித்துவிட்டது. ஆனால், அதிலும் இரண்டு பிரச்சினைகள் குறுக்கிட்டன. பத்து பைசா ஸ்டாம்புகள் பத்தை ஒட்டவே இடம் போதவில்லை. மேல் வரிசையில் ஐந்தாகவும் கீழ் வரிசையில் ஐந்தாகவும் ஒட்டிப் பார்த்தால் ஸ்டாம்புகள் மீது கையெழுத்துப் போடத் திணறினோம். மழைக்கு ஆடுகள் ஒன்றையொன்று நெருக்கிக் கொண்டு மரத்தடியில் ஒதுங்குவது நினைவுக்கு வந்தது. பத்து பத்து பைசா 'ரெவின்யு ஸ்டாம்பு'களையும் ஒன்றோடொன்று இடித்து நெருக்கிக்கொண்டு இருக்கும் வகையில் ஒரு வழியாக ஒட்டினதும் அடுத்த பிரச்சினை எழுந்தது. ஒரே ஒரு ரூபாய் 'ஸ்டாம்பு' மீது என் சிறிய பெயரைக் கையெழுத்திடுவதில் கஷ்டம் இல்லை. இப்போது பத்து ஸ்டாம்புகள் மீது கையெழுத்திட்டால், என் பெயர் ஐந்து ஸ்டாம்புக்குள் முடிகிறது. மீதி ஐந்துக்கு என்ன சொல்வது? அப்புறம் ஒருவர் சொன்னார், மற்ற ஸ்டாம்புகள் மீது சும்மா கோடு போட்டு வைய்யிங்க என்று. அது ஏற்கப்பட்டது.

பிறகு தொலைப்பேசி ஊழியர்களுக்குப் பணப்பட்டுவாடா செய்வதில் தொலைப்பேசித் துறை நிர்வாகம் வேறொரு முறைக்குத் தாவியது. சம்பளப் பட்டுவாடாக்கள் தவிர இதர பட்டுவாடாக்களை வாங்கிக்கொள்ள ஊழியர்கள் அவர்களுக்கான பிராந்திய நிர்வாக அலுவலகத்திலுள்ள CASH COUNTER-க்கு போய் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று கொண்டு வந்தது. இதற்காக ஊழியர்கள் ஒரு நாளைக்கு நாலைந்து பேராய் சேர்ந்து இரண்டு மணிநேரம் அனுமதி பெற்றுப் போய் வருவதென்பதாயிற்று. அப்படியான அலுவலகம் எங்களுக்கு கிரீம்ஸ் சாலையில் குப்புசாமி நாயக்கர் மேன்ஷனிலிருந்தது; வழக்கம் போல 'ரெவின்யு ஸ்டாம்பு' தபாலாபீசுகளில் இல்லை. பெட்டிக் கடைகளிலும் கிடைக்கவில்லை.




சில சமயம் காஷியரே வைத்திருந்து தருவதுமுண்டு, என்ற நம்பிக்கை தைரியத்தில் நாங்கள் மூவர் பஸ்ஸிலேறி ஆயிரம் விளக்கு நிறுத்தத்தில் இறங்கி வெயில் கொளுத்த குப்புசாமி நாயக்கர் மான்ஷனை அடைந்து காஷ் பிரிவை சென்றடைந்தோம். ஓவர் டைம் பணம் வந்திருந்தது. ஆனால், 'ரெவின்யு ஸ்டாம்பு' ஒட்டவேண்டிய அளவுக்கான தொகை அது. அந்த காசாளரிடமும் 'ரெவின்யு ஸ்டாம்பு' இல்லை. இன்னும் ஒரு மணி நேரம்தான் காஷ்/ கௌண்ட்டர் திறந்திருக்கும். ஐந்து மணிக்கெல்லாம் மூடிவிடுவார்கள். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. எங்கள் மூவரில் மீசை ராமச்சந்திரன் என்பவர் மொடாக் குடிமகன். தேநீர் வேளையில் நாங்கள் தேநீருக்கு தோமய்யின் குன்று பட்ரோடுக்குப் போவோம். மீசை, அது வரை எங்களோடு வருபவர் சட்டென்று இடது புறம் திரும்பி மத்தியாஸ் நகர் சேரிக்கு ஓடுவார். இப்போது மீசை கவலைப் படாதவராய் தோன்றினார். வேறெங்குக் கிடைக்கும் என் று காஷியரைக் கேட்க, தெரியாதென்றார். மீசை என்னைத் தட்டி, "என்ன பிரச்சினை?", என்று கேட்டார். அவரிடம் ஒரு 'ரெவின்யு ஸ்டாம்பு' இருந்தது.

'ரெவின்யு ஸ்டாம்பு' ஒட்டணும். போஸ்டாபீசிலயுமில்ல, பொட்டிக் கடையிலுமில்ல."

மீசையின் கண்கள் பெரிதாகி மீண்டும் மாமூலுக்குத் திரும்பின. அவர் 'ஸ்டாம்பு' ஒட்டி பணம் வாங்கிக் கொண்டு, "எங்கூட வாங்க," என்று கூறிவிட்டு எங்கள் இருவரையும் அழைத்துக்கொண்டு வெளியேறி வேகமாய் ஒரு சந்துக்குள் நுழைந்தார். அந்த சந்து பராமரிப்பு போதாத ஒன்று. குடியிருப்பு மனைகளாய் எதுவுமில்லை. கடைகளுமில்லை. சாலையிலுள்ள ஒரு வணிக வளாகத்தின் பின்புற வாயில் இந்த சந்துக்குள் இருக்கிறது. அதைப்போலவே சாலையிலுள்ள பல கடைகளின் பின்பக்க வழியும் இந்த சந்திலிருக்கிறது. சந்தின் கோடியில் ஒரு நுழைவாயிலில் நுழைந்தார் மீசை. அப்போது தான் கவனித்தோம், சற்று துரு ஏறிய சிவப்பு நிற அறிவிப்புப் பலகை - தபால் நிலையம் என்ற பெயர்ப் பலகை. வியப்பாயிருந்தது.

"அந்தப் பக்கமா மெயின் எண்ரன்ஸ் இருக்கா?", என்று கேட்டுக்கொண்டேன்.

"வேறெந்த பக்கமுமில்லை. இதுதான் வழி," என்றார் மீசை. இப்படி இந்த இருள் மண்டிய நடமாட்டம் அரிதான தெரு சந்தில் ஒரு தபால் அலுவலகம் இருப்பது ஒரு பக்கம், வியாபாரம் எப்படி நடக்கும் என்ற யோசனை.

அது சிறிய தபால் நிலையம்.

"'ரெவின்யு ஸ்டாம்பு'", என்றார் மீசை.

"எத்தனை வேணும்?'', என்று கேட்டார் கவுண்டரிலிருந்த ஊழியர், அதிர்ச்சிமிக்க மகிழ்ச்சியோடு ஆளுக்கு பத்து பத்து எனக் கூறிவிட்டு, "ஒரு ரூபா 'ஸ்டாம்பு'தானே?", என்றோம். அங்கு எல்லாம் ஒரு ரூபாய் 'ரெவின்யு ஸ்டாம்பு'களாகவே கிடைத்தது. வாங்கிக்கொண்டு படிக்கட்டில் இறங்குகையில் மீசையிடம் கேட்ட இரண்டு கேள்விகளில் ஒன்று; "இங்க மட்டும் எப்பிடி கிடைக்குது?"

"இங்கபோஸ்டாபீஸ்இருக்கிறதுஜாஸ்திபேருக்குத் தெரியாது", என்றார். கூடவே, "மெயின் ரோட்ல கடைசிலே பெரிய போஸ்டாபீஸ் ஒண்ணிருக்கே," என்றார்.

இந்த சந்து வேறு ஏரியாவுக்குள் வருகிறது.

"சரி, உங்களுக்கு இங்கே ஒரு போஸ்டாபீஸ் இருக்கிறதுஎப்படித்தெரியும்?",இரண்டாவதுகேள்வி.

இந்த இரண்டாவது கேள்வியை நான் மீசையிடம் கேட்கும்போது நாங்கள் இறங்கி வெளியில் வர இன்னும் மூன்று படிகளே இருந்தன.

"சொல்றேன்," என்றார் மீசை.

வெளியில் வந்தவுடன், "தோ, அங்கே பாருங்க." என்று எதிரில் சுட்டிக்காட்டினார் மீசை.

அது - அங்கே இருந்தது தமிழ்நாடு அரசு மதுபானக்கடை. "இங்கே வர்ரதால தபாலாபீசும் தெரிஞ்சது," என்று கூறிவிட்டு, "நீங்க போயிட்டே இருங்க", என சொல்லி கடைக்குள் நுழைந்து கொண்டார். நாங்கள் காஷ் கவுண்ட்டருக்கு விரைந்தோம்.

(தொடரும்)

## வீணை எஸ்.பாலசந்தர்

# தமிழ் திரையில் புதிய அலையின் முன்னோடி

**தினகரன் ஜெய்**

*தமிழ் சினிமாவில் மௌனப் படக்காலம் முடிந்து, பேசும் படம் உருவாகி 3 ஆண்டுகள் கழித்து, 1934இல் வீணை எஸ். பாலசந்தர் குழந்தை நட்சத்திரமாக 7 வயதில் அறிமுகமானார். 'சீதா கல்யாணம்' என்ற திரைப்படத்தில் நடித்ததைத் தொடர்ந்து எஸ். பாலசந்தர் நடிகராக, திரைக்கதை ஆசிரியராக, இயக்குநராக, பாடகராக, இசையமைப்பாளராக, தயாரிப்பாளராக என்று சுமார் 36 ஆண்டுகள் தமிழ் சினிமாவில் பங்காற்றியிருக்கிறார்.*



*கலை மீது ஆர்வம் உள்ள ஒரு பிராமண குடும்பத்தின் பின்னணியே பாலசந்தரை இசை மற்றும் கலையின் மீதான ஆர்வத்தை வளர்த்துக்கொள்ள ஏதுவாக அமைந்தது. இசைக்கருவிகளை இயக்குவதில் தனி ஆர்வம் கொண்டிருந்ததால் பாலச்சந்தர் அவர்களால் தான் இயக்குகிற படங்களுக்கு தானே இசை அமைப்பாளராகவும் பாடகராகவும் பணியாற்ற முடிந்தது.*

*ஏழு வயதில் குழந்தை நட்சத்திரமாக அறிமுகமாகி சிறிய கதாபாத்திரங்களில் நடித்து, பின்னர் தன்னுடைய 21ஆவது வயதில் 'என் கணவர்' (1948) என்ற திரைப்படத்தின் மூலம் இயக்குநரானார் எஸ். பாலசந்தர். "குரு என்று எனக்கு*

யாருமில்லை. வீணையை மீட்க நானே சுயமாக கற்றுக்கொண்டேன்” என்று பாலச்சந்தர் கூறுவது போல், ‘சினிமா இயக்கத்தின் நுட்பங்களை நான் யாரிடமும் கற்றுக்கொள்ளவில்லை’ என்று பாலசந்தர் கூறியதில்லை. ‘இது நிஜமா’ என்ற படத்திற்கு திரைக்கதை எழுதியதோடு கிருஷ்ண கோபாலிடம் உதவி இயக்குநராகவும் பணியாற்றிய பிறகுதான் ‘என் கணவர்’ என்றதன்னுடைய முதல் படத்தை அவர் இயக்கினார். ஆகவே யாரிடத்திலும் உதவியாளராக இல்லாமல் திரைப்படம் இயக்க வந்த முதல் இயக்குநர் வீணை எஸ். பாலசந்தர் என்று நாம் அவரை குறிப்பிட முடியாது. எஸ். பாலசந்தர் எட்டுப் படங்களை இயக்கியுள்ளார். 17க்கும் மேற்பட்ட படங்களில் நடித்திருக்கிறார்.







இவரது திரைப்படங்கள் யாவும் தமிழ் சினிமாவின் அன்றைய மிக முக்கிய அம்சமான நாடகீயத் தன்மை யிலிருந்து மாறுபட்டு மேற்கத்திய பாணியிலான அணுகுமுறையையும் கதை சொல்லும் முறையையும் கதையையும் உள்ளடக்கியது. இவர் இயக்கிய 8 படங்களில் 7 படங்கள் மேற்கத்திய படங்களின் தழுவலாகவும் மேற்கத்திய நாடுகளில் வெளியாகி மிகப் பிரபலமாக அறியப்பட்ட நாவல்களின் கதையாகவும் இருந்தது. இயல்பிலேயே மேலைநாட்டு இலக்கியங்களையும் தமிழ் மொழி தாண்டி இந்திய மொழிகளில் வெளியான இலக்கியங்களையும் வாசிப்பதில் பெரும் ஆர்வம் கொண்டவர் எஸ். பாலசந்தர். மொழி தாண்டி வாசித்த அவருடைய இலக்கியத் தேடலின் விளைவாகவே இவரது முதல் படத்திற்கு பிரபல எழுத்தாளர் ஷதுர்புஜி டோஜி திரைக்கதை எழுதினார். குஜராத்தில் மிகப் பிரபலமாக அறியப்பட்ட இலக்கிய ஆளுமையான ஷதுர்புஜி டோஜியின் கதையை தன் முதல் படமாக தேர்ந்தெடுத்ததிலிருந்து அவரின் இலக்கிய ஆர்வத்தை அறிந்துகொள்ள முடிகிறது.

மேலும், பாலசந்தரின் திரைப்பட முயற்சிகள் யாவும் பரீட்சார்த்த முயற்சியாக இருந்ததையொட்டி தமிழ் சினிமாவில் இயங்கிய பிற படைப்பாளிகளின் படைப்பாக்க முயற்சியையும் இவரோடு ஒப்பிட வேண்டியிருக்கிறது. உதாரணமாக ‘இது நிஜமா’ திரைக்கதையை பாலசந்தர் அவர்கள் எழுதிய போது எல்லீஸ் ஆர். டங்கன் ‘சகுந்தலை’, ‘மீரா’ போன்ற பக்தி இலக்கியங்களில் கவனத்தை செலுத்திக் கொண்டிருந்தார்.

புராணங்களும் பக்தி இலக்கியங்களும் இதிகாசங்களும் தமிழில் படமாகிய போது தான் பாலசந்தர் கதை சொல்லும் முறையை வேறு தளத்திற்கு எடுத்துச்செல்லும் புதுமையான முயற்சியில் ஈடுபட்டார். சினிமாவில் தான் பிரபலமாகாத நிலையில் வியாபாரத்தை கடந்த மாற்று ரசனை போக்கை உருவாக்கும் முயற்சியில் தன் கவனத்தைச் செலுத்தியதால் மட்டுமே இன்று வரை நம்மிடையே எஸ். பாலசந்தர் தனித்துவமாக விளங்குகிறார். மர்மம், துப்பறிதல் என்ற புனைகதை மரபை தமிழ் சினிமாவில் புதிய வடிவத்திற்கு வளர்த்தெடுக்கவே பாலச்சந்தர் அவர்கள் விரும்பினார். தான் இயக்கிய படங்களை மர்மம், துப்பறிதல் என்ற தளத்திலேயே சுவாரஸ்யமாக படமாக்கினார்.

தான் கதாநாயனாக அறிமுகமான ‘இது நிஜமா’ திரைப்படத்திற்கு மர்மம், ஆவி உலகம் என்ற கதை களத்தை அவர் தேர்ந்தெடுத்தே திரைக்கதையை எழுதினார். ப்ரூஸ் ஹம்பர்ஸ்டோன் இயக்கிய ‘வொண்டர் மேன்’ படத்தை தழுவி இப்படத்திற்கு பாலச்சந்தரால் திரைக்கதை எழுதப்பட்டது. (இதே கதை தான் பஞ்சு அருணாசலத்தின் திரைக்கதையில் ‘கல்யாணராமன்’ என்ற பெயரில் கமல்ஹாசன் நடித்து வெளியானது)

50களில் தமிழ் சினிமாவில் இம்மாதிரியான கதைக்களம் போக்கு ஆச்சர்யமிக்க ஒன்று. அந்த கவன ஈர்ப்பும் வரவேற்புமே ஷதுர்புஜியின் கதையை தன்னுடைய முதல் படமாக எடுக்கும் துணிச்சலை பாலச்சந்தருக்குக் கொடுத்தது.

தமிழ் சினிமாவில் 1950களுக்குப் பிறகு பல மாற்றங்கள் நிகழ்ந்தன. குறிப்பாக எம்ஜிஆர் கதாநாயகனாக நடித்து ‘மந்திரிகுமாரி’ வெளிவந்தது. இரண்டு ஆண்டுகள் கழித்து ‘பராசக்தி’ படத்தில் சிவாஜி கணேசன் அறிமுகமானார். ‘பராசக்தி’ வெற்றிக்குப் பிறகு திராவிட இயக்க சிந்தனைகளை வெளிப்படுத்துகிற படைப்புகள் பிரச்சார தொனியில் அதிகமாக வெளிவந்தன. திராவிட இயக்க பின்புலம் கொண்ட நடிகர்கள் வெளிப்படையாக தன் படத்தில் கடவுள் மறுப்பை பேசினர். பிராந்திய உரிமை மற்றும் மொழி அரசியலுக்கு அழுத்தம் கொடுத்துக் கொண்டிருந்த மு. கருணாநிதி, ஏ.கே.



வேலன், கண்ணதாசன் போன்ற திரைப்பட எழுத்தாளர்கள் மத்தியில் எஸ். பாலசந்தர் கலை மற்றும் ரசனை போக்கு குறித்து மட்டுமே சிந்தித்தார். ஆனால், அதேநேரம் கொள்கை பிரச்சாரத்திற்கு சினிமாவை பயன்படுத்தும் கலைஞர்களை பற்றி பாலசந்தர் அவர்கள் எம்மாதிரியான அபிப்பிராயம் கொண்டிருந்தார் என்று அறிய முடியவில்லை.

சாதி ஒழிப்பு, பிராமணிய எதிர்ப்பு, கடவுள் மறுப்பு என்ற சித்தாந்தத்தை தமிழ் சினிமா பேசிக் கொண்டிருந்த காலத்தில் எஸ். பாலசந்தரின் அரசியல் பார்வை என்னவாக இருந்தது என்ற கேள்விக்கான பதிலாக'அவன் அமரன்' படத்தை மட்டுமே கணக்கில் கொள்ளமுடியும். 1958இல் வெளியான 'அவன் அமரன்' திரைப்படம் இடதுசாரி அரசியல் சிந்தனையாளர் ஒருவரின் தயாரிப்பில் பாலசந்தர் இயக்கியது. திராவிட இயக்கத்தினர் சினிமாவை ஒரு பிரச்சார களமாக பயன்படுத்திக் கொண்டிருந்த காலத்தில் பாலச்சந்தர் சினிமாவின் ரசனை மற்றும் மேற்கத்திய படைப்பாக்க தன்மை குறித்து மட்டுமே சிந்தித்தார். உதாரணமாக கலைஞர் கருணாநிதி 'பூம்புகார்' திரைப்படத்திற்கு கதை வசனம் எழுதி வெளியிட்ட அதே ஆண்டில் தான் 'பொம்மை' திரைப்படத்தை எஸ். பாலசந்தர் வெளியிட்டார். சிலம்பு காவிய திரை உருவாக்கத்தின் மூலம் ஆதிக்க சக்திகளை விமர்சித்த திராவிட இயக்க எழுத்துக்கு மத்தியில் ஆல்பிரட் ஹிட்ச்காக்கின் 'Sabotage' திரைப்படத்தை தழுவி எடுக்கப்பட்ட 'பொம்மை' மனித மனங்களில் இறுகி இருக்கும் பேராசையை வெளிக்காட்டியது.



*1957லிருந்து 63 வரை திராவிட இயக்க படைப்பாளிகளின் பங்களிப்புக்கு நடுவே பாலச்சந்தர் தனித்த சிந்தனையில் சினிமாவை கையாண்டார். மேட்டுக்குடி சமூகத்தின் இயல்பையும் மனிதர்களின் பேராசை, காமம், மற்றும் மனித மனதின் இருள் பக்கங்களையும் படமாக்கினார்.*

பாலச்சந்தரின் படைப்பாக்க நேர்மை பராட்டுதலுக்குரியது. தான் இயக்குகிற திரைப் படத்தின் மூலக்கதை அயல் நாட்டு படத்தின் தழுவல் என்பதை அவர் குறிப்பிட தயங்கியதே இல்லை. 'பொம்மை' திரைப்படம் 'Sabotage' படத்தின் தழுவல் என்று பரவலாக பேசப்பட்டாலும் தான் பார்த்த செக்கோஸ்லோவேகியா நாட்டு படத்தின் பாதிப்பால் மட்டுமே அப்படத்தை உருவாக்கினேன் என்று பகிரங்கமாக கூறினார்.

பாலச்சந்தர் இயக்கிய எட்டு படங்களில் ஏழு படங்கள் அயல்நாட்டு படங்களின் தழுவல்களாகவும் மேற்கத்திய நாவல்களின் கதைகளுமாகவே இருந்தன. பாலச்சந்தரின் இயக்கத்தில் இரண்டாவதாக வெளிவந்த 'கைதி' திரைப்படம் பிரபல ஹாலிவுட் இயக்குநர் ஹம்ப்ரே பஹர்ட் இயக்கத்தில் வெளியான 'Dark Passage' படத்தின் அப்பட்டமான தழுவலாக வெளிவந்தது. 'அவனா இவன்' படம் 'An American Tragedy' என்ற அமெரிக்க நாவலை அடியொற்றி எடுக்கப்பட்டது. இப்படத்தில் கதாநாயகன் பாத்திரம் இல்லாமல் எதிர்மறை பாத்திரமே பிரதானமாக மையப்படுத்தப்பட்டு படம் விறுவிறுப்பாக எடுக்கப்பட்டிருந்தது. அதேபோல அகதா கிறிஸ்டியின் 'And Then There Were None' நாவலை தழுவி எடுக்கப்பட்ட நடு இரவில் என்ற படம் மிகப்பெரிய வெற்றியடைந்தது.

மேற்கத்திய பாணியிலான கேமரா கோணங்களும் கதை சொல்லலிலுமே எஸ். பாலசந்தர் ஆர்வம் காட்டினார். அதேபோல தமிழ் சினிமாவில் வழக்கத்திலிருந்த நம்பிக்கைகளை மீறுகிற அல்லது உடைக்கிற தன்மையிலேயே அவரது படைப்பாளுமை இருந்தது. கதாநாயகனுக்கான மேன்மையான குணாம்ச பிம்பங்கள் என்று எதுவும் இவரது படங்களில் கட்டமைக்கப்பட்டதே இல்லை. அம்மாதிரியான கதை சொல்லலில் அவர் நம்பிக்கை அற்றவராகவே இருந்தார். அந்த நாள் திரைப்படத்தின் முதல் காட்சியிலேயே சிவாஜி கணேசன் கொல்லப்படுவது போல் காட்சி அமைத்ததிலிருந்து இதனை விளங்கிக் கொள்ளலாம்.

கதை சொல்லல் காட்சி அமைத்தல், பின்னணி இசை மற்றும் புதுமையான கதைப்போக்கு என்று தமிழ் சினிமாவில் புதிய அலையை உருவாக்கிய வீணை எஸ். பாலசந்தர் தன் கடைசி படமான 'நடு இரவில்' என்ற வெற்றிப் படத்தை தொடர்ந்து சினிமாவில் இயங்கவில்லை.

இன்று நாம் சினிமா துறையில் அஷ்டாவதானி என்று போற்றப்படுகிற பல நடிகர் மற்றும் இயக்குநர்களுக்கு முன்னோடியாக இருந்தவர் வீணை எஸ். பாலசந்தர். எல்லோரும் போல் நானும் சினிமாவில் இருந்தேன் என்பதை தாண்டி என்னால் சினிமாவில் நிகழ்ந்தது என்ன? என்று ஒவ்வொரு திரைப்பட கலைஞனையும் சிந்திக்க தூண்டும் ஆளுமையாகவே வீணை எஸ். பாலசந்தர் இருக்கிறார்.

ஜனவரி 18, எஸ். பாலசந்தர் பிறந்தநாள்.

**தினகரன் ஜெய்** <dinakaranjai20@gmail.com>

# வோலே சொயிங்கா என்றொரு புலிப் பாய்ச்சல்

ஸிந்துஜா

*"நேற்றைய தினத்தை எந்தப் பணக்காரனாலும் விலை கொடுத்து வாங்கிவிட முடியாது. ஆனால், நேசத்துடன் இறுக அணைத்துக்கொள்ள நீ முயற்சித்தால் நாளைய தினம் உன்னுடையதுதான்."*

- வோலே சொயிங்கா



வோலே சொயிங்கா, 1966

வோலே சொயிங்கா இன்று நைஜீரியாவின் அடையாளமாகக் காணப்படுகிறார். உலகெங்கும் அவரது நாடகங்கள் மேடையேறுகின்றன. நாவல்கள் பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் பாடங்களாக விளங்குகின்றன. அவரது கவிதைகள் பல தொகுப்புகளாகப் பலமுறை பிரசுரம் பெற்று வாசகர்களைக் கவர்ந்திழுக்கின்றன. அவரது கட்டுரைகளை நைஜீரியாவின் சர்வாதிகாரிகள் முழு மனதுடன் வெறுத்ததோடன்றி, அவை அளித்த வீச்சைச் சவுக்கடிகளாகக் கண்டு திணறினார்கள்.

முப்பது நாடகங்கள், மூன்று நாவல்கள், மூன்று சிறுகதைத் தொகுப்புகள், ஐந்து வாழ்க்கைக் குறிப்பு நூல்கள், எட்டு கவிதைத் தொகுப்புகள், பதினான்கு கட்டுரைத் தொகுப்புகள், மூன்று திரைப்படங்கள், இரண்டு மொழிபெயர்ப்புத் தொகுப்புகள் (அம்மாடி, மூச்சு முட்டுகிறது!) ஆகியவற்றைப் படைத்த ஆசான், சோயிங்கா.

*1986*இல் நோபல் பரிசு அவரை வந்தடைவதற்கு முன்பே அவர் ஒரு தீவிர இலக்கியவாதியாக உலகெங்கும் அறியப்பட்டிருந்தார். அன்றைய இளம் எழுத்தாளர்களின் லட்சியப் படைப்பாளியாக அவர் நடனமாடினார். லாகோசில் நடந்த ஓவியர்களின் கண்காட்சிகளில் அவரது படம் தவறாமல் இடம்பெற்றது. அப்போது வளைய வந்த ஓர் இசைக்குழுவின் பெயர்: 'சோயிங்காவின் ஆப்பிரிக்கா!'

சர்வாதிகாரத்தை எதிர்த்து நின்ற புரட்சிக் களங்களில் அவர் முன்வந்து நின்றார்.



வோலே சோயின்கா, 2021. தெற்கு நைஜீரியாவில் உள்ள அவரது சொந்த ஊரான அபேகுடாவில் ஒரு நேர்காணலின் போது.

அச்செழுத்துக்களின் நிழலில் இளைப்பாறிக் கொண்டு புரட்சி, செஞ்சட்டை, அடக்குமுறை / ஒடுக்குமுறைக்கான எதிர்ப்பு கோஷங்களை அணிந்து நின்ற எழுத்தாளராக அவர் இருக்கவில்லை. சென்ற நூற்றாண்டின் அறுபதுகளில் அவர் சர்வாதிகார அரசை எதிர்த்து நின்றதால் இருபத்தி இரண்டு மாதங்கள் சிறையில் அடைக்கப்பட்டார். சர்வாதிகார அரசின் அதிகாரிகளுக்கும் புரட்சியாளர்களுக்கும் நடுவே நின்று அவர் சமாதானம் செய்ய முயன்றது தேசத் துரோகமாகக் கருதப்பட்டதால் சிறைவாசம். ஜெனரல் ஸானி அபாகாவின் சர்வாதிகார ஆட்சியின் போது - சூழல் போராட்டவாதியான கென் ஸாரோ - விஸ்வா தூக்கிலிடப்பட்ட சமயம் - சோயிங்காவின் செயல்பாடுகள் அரசின் கோபத்தைக் கிளறின. அதனால், அப்போது அவர் தன் நாட்டை விட்டுச் சென்று இருபது ஆண்டுகள் புலம்பெயர்ந்தவராக வாழ்ந்தார்.

புரட்சிகரமான சிந்தனைகளுக்குச் சொந்தக்காரர், அரசியலில் சர்வாதிகாரத்தை எதிர்த்து நின்று சிறை சென்றவர், அரசினால் மரண தண்டனை விதிக்கப்பட்டவர், புலம்பெயர்ந்தவராகத் தன் வாழ்நாளின் பெரும்பகுதியைக் கழித்தவர் என்று இன்று நமக்கு முன்னால் நிற்கும் சோயிங்கா ஆப்பிரிக்க ராஜ வம்சாவளியில் பிறந்தவர் என்பதை நம்புவதற்குக் கஷ்டமாகக் கூட இருக்கலாம். இந்த ஆச்சரியமே அவரது மேன்மையை இன்னும் உயர்த்திக் காட்டுகிறது.



ஆப்பிரிக்கப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் படித்த அவர் மேற்படிப்புக்கு இங்கிலாந்திலிருந்த லீட்ஸ் பல்கலைக்கழகத்தில் சேர்ந்தார். இதன் மூலம் அவருக்குப் பல பிரபல படைப்பாளிகளுடன் நட்பு ஏற்பட்டது. அச்சமயத்தில் அவர் தன்னுடைய வெற்றிகரமான முதல் நாவலை - சதுப்புநிலவாசிகள் - எழுதிப் புகழ் பெற்றார். அடுத்து வந்த 'சிங்கமும் நகையும்' என்னும் நாடகத்தில் இழைந்தோடிய நகைச்சுவை லண்டனின் ராயல் கோர்ட் தியேட்டரின் பல உறுப்பினர்களை அவர் பால் திருப்பியது. அதன் விளைவாக அவர் லண்டனுக்குக் குடிபெயர்ந்தார். ராயல் கோர்ட் தியேட்டரில் நாடக வாசிப்பாளராக வேலை கிடைத்தது. ராயல் கோர்ட் தியேட்டரே அவருடைய 'கண்டுபிடிப்பு' என்னும் நாடகத்தை

அரங்கேற்றியது. அவருடைய நாடகங்கள் நைஜீரியாவிலும் அரங்கேறின. முன்னேற்றத்துக்கும் மரபுக்கும் இடையிலிருந்த சற்று விரிசலான உறவை அவை வெளிப்படுத்தின.

ராக்ஃபெல்லர் அறக்கட்டளை ஆராய்ச்சி நிலையத்திலிருந்து அவருக்கு கிடைத்த ஸ்காலர்ஷிப் மூலம் அவர் ஆப்பிரிக்க நாடகங்களை ஆய்வு செய்ய லண்டனிலிருந்து நைஜீரியாவுக்குத் திரும்பினார். நைஜீரியாவின் அரசியல் முட்டைத் தலைகளைக் கண்டனம் செய்து அவர் 'காட்டின் நடனம்' என்னும் நாடகத்தை எழுதினார். அது நைஜீரியாவின் சுதந்திர தின நாடகப் போட்டியில் பரிசு பெற்றது. நைஜீரிய அரசாங்கம் லாகோஸில் சுதந்திர நாள் திருவிழாக் கொண்டாட்டத்தை நிகழ்த்திய



இடது: வோல் சோயின்கா 1946 இல் பத்து வயது பாடகர் சிறுவனாக. மையம்: வோல் மற்றும் டினு சோயின்கா 1952 இல், அதே ஆண்டு வோல் இபாடான் பல்கலைக்கழக கல்லூரியில் நுழைந்தார். வலது: 50களில் இபாடான் பல்கலைக்கழகக் கல்லூரியில்.

போது இந்த நாடகம் அங்கு மேடையேறியது.

செனகல் நாட்டின் ஜனாதிபதியும் கவிஞருமான லெப்போல்ட் செங்கோரின் 'ஆப்பிரிக்காவைக் கொண்டாடுவோம்' இயக்கத்தை எதிர்த்து சோ யிங்கா எழுதும் போது, 'பழங்கதைகளைப் பேசிப் பெருமையடைவதை விட யதார்த்த உலகின் வலிமைகளை வெளியுலகில் முன் நிறுத்துவதுதான் இன்றையக் கலைஞர்களின் தலையாயக் கடமை' என்றார். 'புலியின் வலிமை அதன் பெயரில் இல்லை. அதன் பாய்ச்சலில் இருக்கிறது' என்று அவர் கூறியது பின்னாள்களில் ஒரு பொருட்படுத்தத்தக்க வாசகமாகப் பலராலும் பின்பற்றப்பட்டது.

அவர் வேலை பார்த்த பல்கலைக்கழகம் அரசின் ஏஜெண்டாகசெயல்பட்டுப் பல முட்டுக்கட்டைகளை ஏவுகிறது என்று அவர் பணியை விட்டு விலகினார். 1965ஆம் ஆண்டு அவர் ஒரு ரேடியோ ஸ்டேஷனைத் துப்பாக்கி முனையில் மிரட்டி வேலை செய்ய விடாமல் தடுத்தார் என்றும், வடக்கு நைஜீரியப் பிரதமரின் உரை அடங்கிய டேப் ஒன்றை மாற்றி தேர்தல் தகிடுதத்தங்களை விளக்கும் டேப்பை ஒளிபரப்பினார் என்றும் குற்றம்சாட்டப்பட்டு முதன்முறையாகக் கைது செய்யப்பட்டார். ஆனால், இதை எதிர்த்து உலகெங்கும் இருந்த படைப்பாளிகள் கண்டனம் செய்ததைத் தொடர்ந்து அவர் சில மாதங்களில் விடுதலை செய்யப்பட்டார்.

என்றாலும் 1966இல் நடந்த ராணுவப் புரட்சியின் போது அவர் அதிகாரமில்லாமல் ராணுவ கவர்னரைச் சந்தித்து போரை நிறுத்துமாறு வேண்டியதை அரசு குற்றமாகக் கருதி அவரை இருபத்தி இரண்டு மாதங்கள் சிறையில் அடைத்தது. தன்னுடைய அந்த சிறை வாழ்க்கை பற்றி ஒரு நேர்காணலில் சோயிங்கா இவ்வாறு கூறினார்:

"சிறையில் இருந்த காலங்களில் உயிர் வாழ்வது என்பதே பிரச்சினையாக இருந்தது. சிறைக் காவலர்கள் என் சிந்தனைத் திறமையை ஒடுக்குவதில் குறியாயிருந்தார்கள். படிப்பதற்குப் புத்தகங்களைத் தர மறுத்தார்கள். எழுதும் முயற்சியை அனுமதிக்கவில்லை. இன்னொரு மனிதனைப் பார்த்துப் பேசக்கூட விடவில்லை. இம்மாதிரி மறுதலிப்புகளில்தான் நாம் எவற்றையெல்லாம் இழக்கிறோம் என்பதைப் புரிந்துகொள்ள முடியும். சுதந்திரமாக வளைய வந்த நாள்களில் தனிமை கிடைக்காதா என்று தவித்த நாள்கள் நினைவுக்கு வந்து கேலி செய்தன. யாருடனும் பேசாமல் பழகாமல் நடமாடும் கொடூர அனுபவம் எத்தகைய ஆசாமியையும் ஒடித்துப் போட்டு விடும். ஆதலால் இத்தகைய கொடூரமான நேரங்களில் இதுவரை ஒதுக்கி வைத்திருந்த விஷயங்களை நினைவில் புரட்டிப் பார்த்தேன். பள்ளி மாணவனாக இருந்த போது எனக்கு வேப்பங்காயாக இருந்த கணக்கு இப்போது கை கொடுத்தது. கணக்கு வகைகளில் இருந்த சூத்திரங்கள், ஜாமெட்ரி, அல்ஜீப்ரா என்று பயமுறுத்தியவை இப்போது நினைவில் வர அவற்றின் அடிப்படைகளைக் குறித்து யோசனை செய்தேன். கணக்கு ஒரு அழகான யுக்தி என்று தெரிந்துகொண்டேன். ஆனால், சிறையிலிருந்து வெளிவந்த பின் அதைப் பின்தொடரும் ஆவல் எனக்கு எழவில்லை!"

ஒரு எழுத்தாளராக வேண்டும் என்று சோ யிங்காவிடம் முன்முடிவு எதுவும் ஏற்படவில்லை. எழுதும் பழக்கம் அவருள் மெல்ல மெல்ல வளர்ந்தது.

ஆனால், அதைப் பற்றித் தீவிரமாக எந்த முடிவும் எடுக்கவில்லை. நீண்ட ஒரு எண்ண இழுபறிப்புக்குப் பின்தான் படைப்பு உருவாகிறது என்பதால் ஒரே மூச்சில் அல்லது தினந்தோறும் எழுதும் பழக்கத்தை அவர் கடைப் பிடிக்கவில்லை. மாறாக ஒரு முறை எழுதுவதை ஆரம்பித்தால் பல நாள்கள் விடாமல் எழுதும் வழக்கத்தைக் கொண்டிருந்தார். இம்மாதிரி நாள்களில் அவர் வேறெந்த வேலையிலும் கவனம் செலுத்தவில்லை. ஒரு முறை எழுதுவதை நிறுத்தும் போது மறுபடியும் ஆரம்பிக்கச் சில காலம் ஆகியது, இம்மாதிரி கிடைத்த இடைவெளி எழுதுவதற்கு இணையான முக்கியத்துவம் பெற்ற ஒன்று என்று அவர் கருதினார்.

ஒரு சிறந்த படைப்பாளி என்பவன் தனக்கான தேடலை அனுபவத்தின் மூலம்தான் பெற்றறிய முடியும். அவன் எழுதும் முன் தனது ஈகோவை விட்டுக் கொடுத்துவிட வேண்டும் என்று அவர் உறுதியாக நம்பினார். 'திறந்த மனது பல வெளிகளைக் கடக்கிறது. நிர்ப்பந்தம் எதுவுமற்றுப் பல விஷயங்களைப் பல நோக்குகளில் சந்திக்கிறது' என்று சோயிங்கா கூறினார்.

அவர் எழுதும் போது பக்கத்தில் யாராவது கூட இருப்பதை விரும்பினார். அவ்வாறு யாரும் சிக்காத போது, தன் கற்பனையில் மனிதர்களை வரவழைத்து உறவாடிக் கொண்டே எழுதுவேன் என்றார்.

தன்னைப் பொறுத்தவரை தான் நாவல் எழுதியது ஒரு விபத்து என்றார். தன்னை என்றும் ஒரு நாவலாசிரியராகக் கருதிக் கொண்டதில்லை என்றும் வாக்குமூலம் கொடுத்தார்! தனது முதல் நாவலான 'மொழிபெயர்ப்பவர்கள்' ஒருவித ஆற்றாமையில் எழுந்ததாகக் குறிப்பிட்டார். இவ்வாறு அவர் கூறினாலும் ஐம்பது வருஷங்கள் கழித்து அவர் எழுதிய, 'பூவுலகின் சந்தோஷமான மனிதர்கள் நிரம்பிய நாட்டின் வரலாறு' என்ற நாவல் உலகெங்கும் சிறந்த வரவேற்பைப் பெற்றது. இம்மாதிரி வரவேற்பை அவர் எதிர்பார்க்கவில்லை என்றும் அது சற்று மூச்சுத் திணறலைத் தனக்கு ஏற்படுத்தியதாகவும் குறிப்பிட்டார்!

"நாவல் என்னிடமிருந்து உருவாகும் போது என்னை நானே துன்புறுத்திக்கொண்டு மகிழ்வடையும் உணர்வு எனக்கு ஏற்படுகிறது. உண்மையில் நாவல் எழுதுவது என்பது ஒரு வலி தரும் விஷயம்தான். நாம் எதிர்பாராத பல திசைகளில் அது பிரயாணிக்க முயலுகிறது. ஆனால், நாடகம் அப்படியில்லை. அது தன்னிடம் கூர்மையான நிலையை வைத்துக் கொண்டு அதன்பால் நம்மை அணுகச் செய்கிறது. ஒரு கதைஞன் தன் நாவலில் பல பாத்திரங்களை உலவ விடுகின்றான். அவை யாருடைய பேச்சுக்கும் காது கொடுக்காமல் தம்மிஷ்டம் போல் பாய்ந்து திரிகின்றன. அப் பாத்திரங்களை எப்போது கடைசியாகப் பார்த்தோம் என்று நினைவின் அடுக்குகளில் தேடிப் பார்க்கத் தூண்டுகின்றன. நல்ல நாவலாசிரியர்கள் என் பாராட்டுகளுக்கு உரியவர்கள். எனக்குச் சிக்காத ஒன்றை அடக்கியாளும் திறமை படைத்தவர்களாக அவர்கள் இருக்கிறார்கள்" என்று ஒருமுறை கூறினார்.

நாடகம், கவிதை, கட்டுரை, திரைப்படம், நாவல் - இவற்றுள் அவர் நாடகத்தையே பெரிதும் விரும்பி முக்கியத்துவம் கொடுத்தார். ஒரு நேர்காணலில் "நாடகம்தான் எனது உயிர். உதாரணமாகக் காலியான ஒரு அரங்கத்துக்குள் எவ்வித நோக்கமும் இல்லாமல் நான் நுழையும் போது என் விரல்கள் சிலிர்க்கின்றன. நான் ஒரு நாடகீய மரபைச் சார்ந்த சமூகத்திலிருந்து வருவதுதான் இதற்குக் காரணம். சிறுவயதிலிருந்தே நாடகங்களுடன் நான் வளர்ந்து வந்திருக்கிறேன். என்னுடைய உள்ளார்ந்த உணர்வுகளை வெளிச்சத்திற்கு கொண்டு வர இது பெரிதும் உதவியாக இருக்கிறது" என்றார்.

நாடகம் என்பது உரைப்பகுதி நிரம்பியது; அது ஒரு புரட்சிகரமான கலை வெளிப்பாடு என்பது அவரது கோட்பாடாக இருந்தது. அது ஓர் உருவமற்ற செயலுடன் ஒத்துப் போகிறது. எப்போதும் மாறிக் கொண்டே இருக்கும் இயல்பைப் பெற்றிருக்கிறது. சூழலைப் பற்றிய பிரக்ஞையை அது உருவாக்குகிறது. உதாரணமாக, எங்கே அது மேடையேற்றப்படுகிறது, அதன் பார்வையாளர்கள் யார் யார், அவர்களின் குணாதியங்கள் என்னென்ன, தரம் பற்றிய அவர்களது ஐயங்கள் அல்லது திட்டமான கருத்துக்கள் யாவை - இவையனைத்தையும் தன்னுள் உள்வாங்கிக் கொண்டு மேடையேறுவதே நாடகம் என்று சோயிங்கா கருதினார். சில நாடகங்கள் க்ஷணத்தில் மாறுதல்களை ஏற்கின்றன. இவற்றை அவர் 'கொரில்லா நாடகங்கள்' என்று அழைத்தார். சிலர் இவற்றை 'நடமாடும் நாடகம்' என்றும் வேறு சிலர் 'பத்திரிகை நாடகம்' என்றும் அழைத்தனர். இது தவிர 'வீதி நாடகம்' என்றொரு வகையும் எழுந்தது. என்ன பெயரிட்டாலும் சூழலின் இயக்கியவியலுக்குப் பதில் அளிப்பதுதான் நாடகம் என்பது என்றார்.

உலகப் புகழ்பெற்ற அவரது 'அரசனின் மரணமும் குதிரைப்படை வீரனும்' என்ற நாடகத்தை 1970களில் சோயிங்கா எழுதினார். அதை எழுதும் போது அவர் புலம்பெயர்ந்த படைப்பாளியாக இங்கிலாந்தில் வசித்தார். சர்ச்சில் கல்லூரியில் வேலை பார்த்துக் கொண்டிருந்தவர் தினமும் கல்லூரியில் மாடிப் படிகளில் ஏறிப் போகும்போது சுவரில் சர்ச்சிலின் பெரும் உருவப்படம் ஒன்று மாட்டி யிருந்ததைப் பார்த்தபடி செல்ல வேண்டியிருக்கும். பிரிட்டிஷ் காலனிய ஆதிக்கத்தின் பிரதிநிதியாக சர்ச்சில் உலகை வலம் வந்து கொண்டிருந்த நேரம் அது. அதைப் பார்க்கும் போதெல்லாம் அந்தப் படத்தைக் கழட்டி சுக்கு நூறாக உடைத்து விட வேண்டும் என்னும் வெறி சோயிங்காவுக்கு இருந்தது. இம்மாதிரி ஒரு பொழுதும் நடக்கவில்லை என்றாலும்



1938: சோயின்கா குடும்பம். வோல் சோயின்காவின் தாய் கிரேஸ் எனியோலா சோயின்கா மற்றும் தந்தை சாமுவேல் அயோடெல் சோயின்கா, வோல், டினு மற்றும் ஃபெமியுடன்.

அவருள் முளைவிட்டு விருட்சமாகியிருந்த புரட்சிச் சிந்தனை பல நாடகங்களுக்கு வழி வகுத்தது. நாடகங்களைத் தவிர கதைகளிலும் கட்டுரைகளிலும் கவிதைகளிலும் இது விரவிப் படர்ந்தது.

நைஜீரியா, பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தில் காலனி நாடாக இருந்த போது நடந்த ஒரு சம்பவம்தான் மேற்சொன்ன நாடகமாக உருவாக்கம் பெற்றது. யொரூபா இனக்குழு அரசன் ஒருவன் இறந்து விட, அந்த இனக்குழுவின் மரபுச் சடங்கின்படி குதிரை வீரன் ஒருவன் தற்கொலை செய்துகொள்ள முயலுகிறான். அப்போது அங்குள்ள அரசு அதிகாரி இத்தகைய தற்கொலை காட்டுமிராண்டித்தனமானது என்று அதைத் தடுத்து நிறுத்துகிறான். சோயங்காவின் நாடகம் தன் தற்கொலையை விதி என்று விரும்பி ஏற்கும் வீரனுக்கும் அதை அநாகரிகமான செயல் என்று தடுத்தும் ஆங்கிலேயனுக்குமிடையே உள்ள சமூக கலாசார வித்தியாசங்களைப் படம் பிடிக்கிறது. கிழக்குக்கும் மேற்குக்கும் இடையே ஏற்படும் கலாசார மோதல் என்று சில விமரிசகர்கள் வருணித்ததை சோயிங்கா கடுமையாக எதிர்த்தார். நாடகமோ, நாவலோ, திரைப்படமோ அது மேற்கத்தியக் கட்டமைப்பிலிருந்து விலகி இருந்தால் உடனே அதைக் 'கலாசார மோதல்' என்று வருணித்துக் கீழ்மைப்படுத்தப்படுவதை அவர் ரசிக்கவில்லை. மேற்கே நிலவும் சிந்தனை வறட்சியும் மேலோட்டமான பார்வையுமே இத்தகைய வருணனைகளுக்குக் காரணம் என்றார்.

கல்லூரி ஹாலில் சர்ச்சிலின் படத்தை அடித்து நொறுக்க வேண்டும் என்று கோபப்பட்டதற்கு இணையாகவே அவர் தனது நாவல்களில் இடம் பெறும் எரிச்சல் உணர்வுகளை எடுத்துரைத்தார். தன்னை 'ஆக்ரோஷமான இளைஞன்' என்று யாரும் அழைக்க வேண்டியதில்லை என்றார். அவரது பாத்திரங்களின் உள்மன உணர்வுகளுக்குள் புகுந்து கொண்டு அறிவதே தன் எழுத்தின் லட்சியம் என்றார். கலாசார மோதலை விட கலாசாரப் புரிதலில் மிகுந்த நாட்டம் கொண்டவராயிருந்தார்.

'அரசனின் மரணமும் குதிரைப்படை வீரனும்' நாடகம் அவ்வளவு எளிதாக மேடையேறிவிட முடியாததாய் இருந்தது. ஆனால், மேற்கத்திய நாடுகளில் இந்நாடகம் மேடை ஏறுவதற்கு முன்பே அதிகப் புகழ் பெற்றுவிட்டது. ஆனாலும், இந்நாடகத்தை மேடையேற்றுவதில் பல சவால்களை ஒருவர் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. உதாரணமாக முதல் காட்சியில் யொரூபா இனமக்களின் நிறம், நடையுடை பாவனைகள், கவிதையுரை ஆகியவற்றை ஒரு வெளிநாட்டு நாடக இயக்குநர் தெரிந்தறிய அவர் நைஜீரியாவுக்குப் போக வேண்டியிருந்தது. நாடக இயக்கத்தின் போது சோயிங்காவின் பிரசன்னம் அதிகம் தேவைப்பட்டது. 1976இல் சிகாகோவில் 'குதிரைக்காரன்' நாடக பயிற்சியில் இரண்டு வாரங்கள் பங்கு பெற்ற நடிகை மொழியைத் தன்னால் கையாள முடியவில்லை என்று நடிப்பைத் தொடர மறுத்து விட்டாள். நடிகர்களிடம் சோயிங்கா, "உங்களில் பெரும்பாலானவர்களுக்கு ஆப்பிரிக்கக் கலாசாரம், ஆப்பிரிக்க அரசியல், ஆப்பிரிக்க இசை பற்றியெல்லாம் ஒரு இழவும் தெரியவில்லையே" என்று கடிந்து கொண்டார். இத்தகைய தாக்குதலை எதிர்பார்க்காத அவர்கள் பெரும் அதிர்ச்சி அடைந்தார்கள். சோயிங்காவின் சொற்களில்: "அந்த நடிகர்களின் உடல்களைச் 'சின்னஞ்சிறு துண்டுகளாக' உடைத்துப் பிறகு அனைத்தையும் 'சேர்த்து' எப்படி அவர்கள் யொரூபா நடன அசைவுகளை நுணுக்கமாகப் புரிந்துகொண்டு செயல்பட வேண்டும் என்று நானும் நாடக இயக்குநரும் மன்றாட வேண்டியிருந்தது!"

அவருடைய சமகாலப் படைப்பாளிகள் ஆப்பிரிக்காவைப் பற்றிக் கொண்டிருந்த 'வண்ணமயமான' எண்ணங்கள் தன்னைச் சார்ந்திருக்க அவர் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு படைப்பாளி அரசியலைத் தவிர்க்க வேண்டும் என்னும் பல கவிஞர்களின், நாடக ஆசிரியர்களின் கருத்தையும் சோயிங்கா ஏற்கவில்லை. அவருடைய கவிதைகளும் மற்ற படைப்புகளும் சர்வாதிகார


அக்டோபர் 21, 1969

அரசியல் அமைப்பையும், சீரழிவை நோக்கி நகர்ந்து கொண்டிருந்த ஆட்சியின் பொறுப்பின்மையையும் எதிர்த்து எழுந்தன.

*2001*இல் லாகோஸில் இருந்த தேசியக் கலை அரங்கத்தில் மேடையேறிய 'மன்னர் பாபு' என்னும் நாடகம் உலகப் புகழ் பெற்ற பிரெஞ்சு எழுத்தாளரான ஆல்ஃப்ரெட் ஜெர்ரியின் 'உபு ரோய்' என்னும் மகத்தான அபத்த நாடகத்தை ஒட்டி எழுதப்பட்டது. சோயிங்காவின் நாடகம் ஆப்பிரிக்க சர்வாதிகாரியான ராபர்ட் முகாபேயையும் அவனைப் போன்ற மற்ற சர்வாதிகாரிகளையும் இடித்துரைத்து எழுதப்பட்டது. இந்தச் சர்வாதிகாரிகள் தங்களது சொந்த நலன்களுக்காக எப்படி லட்சக்கணக்கான மக்களைச் சுரண்டியும் பலி கொடுத்தும் நடந்து கொண்டார்கள் என்று இந்த நாடகம் விவரித்தது

கவிதையிலும் தனது முத்திரையைப் பதித்தவர் வோலே சொயிங்கா. சுமார் அறுபது வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்ட ஆனால்,இன்றும் சத்தியத்தின் குரலாய் ஒலிக்கின்ற அவரது கவிதை ஒன்று கீழே: தலைப்பு: தொலைபேசி உரையாடல்

மிக நியாயமான வாடகை.
இருப்பிடமும் சரியாய் இருந்தது.
வீட்டுச் சொந்தக்காரியும்
சற்றுத்தொலைவில்தங்கியிருப்பதாய்சொன்னாள்
ஆகவே சொல்ல எனக்கு எதுவும் இருக்கவில்லை.
என் சுய வாக்குமூலத்தைத் தவிர:
'மேடம், நான் ஒரு ஆப்பிரிக்கன். '
நிசப்தம்.
செழிப்பான வாழ்க்கை தந்த நிசப்தம்.
வார்த்தைகள் வந்தன -
லிப்ஸ்டிக் உதடுகள்.
நீண்ட தங்க முலாம் பூசப்பட்ட
சிகரெட் பிடிப்பான்.
வந்த குரல்.
நான் திடுக்கிட்டேன். சரியாகத்தான் என் செவியில் விழுந்தது.
'எவ்வளவு கறுப்பு?'
தொலைபேசியின் பட்டன்கள் நாற்றம்.
ஊசிப் போன மூச்சு பூத்தெங்கும்.
சிவப்புச் சுவர்
சிவப்பு பூத்
குத்தும் சிவப்புப் பேருந்து கறுப்புத் தார்ச் சாலையில்.
உண்மைதான். வெட்கக்கேடு.
அருவருப்பான நிசப்தம்.
மறுபடியும் கருணைக் குரலுடன் அவள்:
'நீ ரொம்பவும் கறுப்பா? அல்லது லேசான கறுப்பா?
அதாவது சாக்லேட் கறுப்பா அல்லது சாதாவா?
கூர்மையான குரல்.
அக்கறையுடன் மாறுபட்ட அழுத்தத்துடன்
'நீ மிகவும் கறுப்பா? அல்லது வெளிர் நிற..?"
என் தேர்ந்தெடுத்த சொற்கள் -
"எனக்கு மேற்கு ஆப்பிரிக்கப் பழுப்பு நிறம்."
"என் பாஸ்போர்ட்டில் குறிக்கப்பட்டது."
"இது என்ன புதிதாக?" என்று கேட்டாள்.
"மாநிறக் கறுப்பு" என்றேன்.
"கறுப்புத்தானே?"
"இல்லையில்லை. என் முகம் மாநிறக் கருப்பு.
என் உள்ளங்கை, பாதங்கள் ஆகியவை நிறமற்ற ரசாயன திரவ நிறம்."
பதற்றத்துடன் மேலும் தொடர்ந்தேன்.
"என் பின்புறம் காக்கை நிறம்தான்.
ஒரு நிமிடம் கேளுங்கள் மேடம்."
அவள் தொலைபேசி இடியைப் போல என் காதில் விழப் போகிறதோ?
கெஞ்சினேன்.
"நீங்களே உங்களை என்னிடத்தில் வைத்துப் பாருங்கள் மேடம்."

"ஸிந்துஜா" <weenvy@gmail.com>

# கி. சரஸ்வதி கவிதைகள்

1. சமம்

பூத்துக் குலுங்கும்
செடிகளிலும்
பட்ட மரத்தின்
கிளைகளிலும்
அதே சந்தோஷப் படபடப்பைக்
கடத்துகிறது
பேதங்கள் பார்க்காத பட்டாம்பூச்சி

2. தோற்ற மாற்றம்

மூதாட்டியைக் கைப்பிடித்து
அவ்வளவு ஆதரவாகப்
பேருந்தில் ஏற்றி விடுகையில்
அத்தனை நட்பாகத் தெரிபவர்தான்

சற்று முன்பு நீண்ட துப்பாக்கியுடன்
கைவிலங்கிடப்பட்ட ஒருவனை
அழைத்துச் செல்கையில்
அவ்வளவு பயத்தை ஏற்படுத்திய
போலீஸ்காரர்

3. மழையாகிறேன்

மழைநீர் படாமலிருக்க
லேசாகப் புடவை செருகி
நடக்கிறாய்
கணுக்கால் பார்க்க வேகமெடுக்கிறது மழை

கூந்தல் நெற்றி நாசி இதழ் கழுத்து
நனைத்து இன்னும் இறங்குகிறது மழை
இல்லையில்லை ....
ஏறி இறங்குகிறது மழை

மழையில் நனையக் காதலை நீட்டுகிறேன் நான்
நாணத்தைத் தருகிறாய் நீ

உன்னை வரையும் யாரையும்
பிடிப்பதில்லை
மழையைத் தவிர

மழை விட்ட பிறகும் மழை தேடுகிறாய்
தூறலிடுகின்றன பூ மரங்கள்

மழையில் நனைந்து சிலைத்திருக்கிறாய்
உன் பேரழகு பருகி நான்
பிழைத்திருக்கிறேன்....

4. வா... வாழலாம்!

காதல் மிகுந்து வழியும்
ஒரு கவிதை எழுதவேண்டும்

சிறப்பான எழுதுகோல்
வெண்மை திகழும் காகிதம்

இனிப்புச் சொட்டும் தேநீர்
தோய்த்துக் கொள்ள
ரொட்டிகள்

சிறு குளிர்
மொட்டைமாடி
மாலைப் பொழுது
சுற்றிலும் பூச்செடிகள்
தூரத்தே சர்க்கரைச் சூரியன்
மனம் நிறைந்த நான்
எல்லாம் தயார்

நீ எங்கிருக்கிறாய்?

**கி. சரஸ்வதி**
<ameech2004@gmail.com>

# இறுதி முடிவு

## இந்திரா பார்த்தசாரதி

வாசல் கதவைத் தட்டிவிட்டுப் போய்விட்டான் எமன். நாடகத்துக்கு முதல் விசிலா?

டாக்டர்கள் ஆச்சர்யப்பட்டார்கள். "இவ்வளவு பெரிய அட்டாக், நீங்கள் தப்பிச்சது மிராக்கிள்தான்."

தப்பித்தது எதற்காக என்று யோசித்தார் நடேசன். உலகத்தில் நடப்பன அனைத்துக்கும் காரணம் இருக்கவேண்டும் என்று சிலர் சொல்லுகிறார்கள்.

எதேச்சையாக நடந்துவிடுகின்ற ஒற்றுமையை வைத்துக்கொண்டு இதைக் காரணம் என்று குழப்பிக்கொள்வது முட்டாள்தனம் என்று கூறுகின்றவர்களும் இருக்கிறார்கள். காரணம் இருக்கின்றது என்று நம்பினால், தப்பித்தது அவர் இருப்புக்கு ஓர் அர்த்தம் கற்பித்து, அவருக்கு ஓர் அடையாளத்தைத் தருகின்றது. இனிமேல் என்ன சாதனை சாத்தியம், எண்பது வயதுக்கு மேல்?

இது வரையில் என்ன சாதித்திருக்கிறேன், உண்பது, உறங்குவது, இனப் பெருக்கம் என்பன தவிர என்று சிந்தித்தார் நடேசன். நல்ல வேளை, இனப் பெருக்கம் ஒன்றோடு நின்றுவிட்டது. இதுவே மனித சமுதாயத்துக்குப் பெரிய உதவி இல்லையா?

அவர் தப்பித்தது, எதேச்சையாய் நிகழ்ந்துவிட்ட ஓர் ஒற்றுமையாக இருக்கக் கூடும். எமன் ஒரு முக்கியமான ஃபைலைக் கொண்டு வர மறந்திருக்கலாம். எடுத்து வரத் திரும்பிப் போயிருப்பானோ என்னவோ!.

"அறுவைச் சிகிச்சைச் செய்ய இயலாது, நீங்கள்தான் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்" என்று டாக்டர்கள் சொன்னது, எதுவும் எப்பொழுது வேண்டுமானாலும் நிகழலாம் என்ற காரணத்தினால் என்பது இப்பொழுது புரிகிறது.



ஒரே வாரிசு போன மாதம் அமெரிக்காவிலிருந்து மூன்று வார விடுப்பில் வந்த போது, ஆரோக்கியமாக இருந்துவிட்டு, அவன் திரும்பிப் போனவுடன், இப்படி மாரடைப்பு அவருக்கு வந்தால், மகன் மனத்தில் ஓடும் எண்ணங்களை என்னவென்று சொல்ல முடியும்? 'போன மாதம் நான் வந்திருந்தபோதே இது வந்திருக்கக் கூடாது? மறுபடியும் நான் இப்பொழுது 'லீவ்' எடுத்தாக வேண்டும்!'

அப்படி அவன் நினைத்தால் தப்பில்லை. அவன் 'பாஸ்' எப்படிப்பட்டவனோ?

ரெயில், விமானம் இவற்றுக்குக் கால அட்டவணை இருப்பது போல், மனிதனுடைய பிறப்புக்கும் இறப்புக்கும் அது இருக்கக் கூடாது? வெளிநாடுகளில் மகன்களும் மகள்களும் 'லீவ்' எடுத்துக்கொண்டு வர எவ்வளவு சௌகர்யமாக இருக்கும்? இரண்டாம் தடவை லீவில் வந்திருக்கிறான், பாவம் அவருடைய பிள்ளை!

ஆனால், எதுவும் டாக்டர்களாலேயே உறுதியாகச் சொல்லமுடியவில்லை! கால அட்டவணை இருந்தால், நிச்சயமற்றத்தன்மையும் காலனின் வருகையில் ஒரு 'ஸஸ்பென்ஸும்' இருக்காது! அல்லது, பீஷ்மருடைய அதிர்ஷ்டம் இருந்தால், அவர் உத்திராயணம் வரை மரணத்தை ஒத்திப் போட்டதுபோல், மகனுடைய விடுமுறையை ஒட்டி அவர் தம்முடைய மரணத் தேதியை வைத்துக்கொள்ளலாம்.

"நான் பத்து வருஷத்துக்கு முன்னாலியே சொன்னேன் - அம்மா போனவுடனே - எங்க கூட அமெரிக்காவுக்கு வந்துடுங்கன்னு, நீங்க பிடிவாதமா கேக்கலே?" என்றான் அவர் மகன் பிரபு, மருந்து மாத்திரையை அவரிடம் கொடுத்துக்கொண்டே.

"என்ன ஆகியிருக்கும்? அங்கே 'அட்டாக்' வந்திருக்காதா?" என்றார் நடேசன்.

"வந்திருக்கலாம், ஆனா உதவிக்கு நாங்க கூடவே இருக்கோமே? டாக்டர் இப்பொ உங்க கூட ஆள் இருந்துண்டே இருக்கணுங்கிறாரே?"

அமெரிக்காவில், கூடவே ஆள் இருந்திருக்க முடியுமா? கணவன், மனைவி இருவரும் வேலைக்குப் போகிறார்கள். அவர்களுடைய இரண்டு மகள்களும் வெளியூர்களில் கல்லூரிகளில் படிக்கிறார்கள். இதைப் பற்றிக் கேட்டால், இதற்கு பதில் கூற இயலாமை அவன்

மனச் சங்கடத்தை அதிகரிக்கும்.

அவனும் இதைப் பற்றி யோசிக்காமல் இருந்திருக்கமாட்டான். தன் மனச் சமாதானத்துக்காக இப்படிச் சொல்லிக்கொள்ளுகிறான்.

“இப்பொ என்ன செய்யறதுன்னே தெரியலியே! பத்து வருஷத்துக்கு முன்னாலியே வந்திருந்தீங்கன்னா, இப்பொ அமரிக்கன் ‘சிட்டிஸன்’ கூட ஆகி யிருக்கலாம்,” என்றான் பிரபு.

“அப்பொ புஷ்ஷுக்குப் பயந்துண்டு ‘ஹார்ட் அட்டாக்‘ வந்திருக்காதா?”

“அப்பா, உங்க குதர்க்கத்துக்கு என்னால் பதில் சொல்லமுடியாது. நீங்க இனிமே தனியா இந்த வீட்டிலே இருக்க முடியாது. அமெரிக்காவுக்கு என்கூட வரதும் சாத்தியமில்லே.. டோன்ட் யூ ரியலைஸ் தி சிச்சுவேஷன்?”

“நீ சொல்லறது புரியறது... ‘சொல்யூஷன்’ என் கையிலே இல்லியே, உனக்கே இப்பொ புரிஞ் சிருக்கும்... எவ்வளவு பெரிய ‘அட்டாக்! அன்ட்ஐ ஹவ் ஸர்வைவ்ட்!”

“மறுபடியும் ஆரம்பிச்சுட்டீங்களா? நான் குற்ற உணர்வினாலே கஷ்டப்படணும்னே பேசறீங்களா?”

“நோ! இப்பொ என்ன செய்யணுங்கிறே, சொல்லு கேக்கறேன்...”

அவன் சோபாவில் உட்கார்ந்தான். சிறிது நேரம் பேசாமல் உத்தரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். சொல்லத் தயங்குகிறான் என்று தோன்றிற்று நடேசனுக்கு.

“சொல்லு, என்ன யோசிக்கறே?”

“‘ரிடைரிங் ஹோம்ஸ்’ பத்தி என்ன நினைக்கறீங்க, ஸம் அஃப் தெம் ஆர் ரியலி குட்” என்றான் பிரபு.

“இந்த வீட்டை என்ன செய்யறது?”

“‘இட் ஈஸ் அப் டு யூ’. பூட்டி வச்சுக்கலாம், வாடகைக்கு விடலாம், விக்கணும்னாலும் விக்கலாம்... வீடு ‘ஈஸ் நாட் எ பிக் டீல்.’”

“எனக்கு ‘பிக் டீல்’தான். மூணு தலைமுறை இந்த வீட்லே இருந்திருக்கு.”

“இது உங்களோட ‘ஸென்டிமெண்டல் ஸப்ஜெக்ட்’, நான் இதெ பத்திப் பேச விரும்பலே... உங்களைப் பத்திதான் என் அக்கறை.”

அவருக்கு எது நல்ல ஏற்பாடு என்பதைப் பற்றி அவன் ஏற்கனவே தீர்மானித்துவிட்டான். சில இடங்களைப் பார்த்துவிட்டும் வந்திருக்கிறான் என்றும் தெரிகிறது.

“நான் நம்ம வீட்டிலேயே இருக்கிறதிலே உனக்கென்ன ஆட்சேபணை?” என்றார் நடேசன். அவர் எழுந்து, சோம்பல் முறித்துக்கொண்டே உலாவ ஆரம்பித்தார்.

“வீட்டை ‘மானேஜ்’ பண்ணறது அவ்வளவு சுலபமில்லே, அப்பா. அந்த ‘ஸ்ட்ரெஸ்’ உங்க ‘ஹார்ட்’டுக்கு அவ்வளவு நல்லதில்லேங்கிறார் டாக்டர். “ஹோம்‘லே நீங்க நிம்மதியா இருக்கலாம். வேளச்சேரியை தாண்டி ஒரு இடத்திலே ஒரு ‘ப்யூட்டிஃபுல் ஹோம்‘ இருக்கு. அஞ்சு நட்சத்திர ஹோட்டல் வசதி. இதைத் தவிர வசதி வேணும்னாலும் நாமே பண்ணிக்கலாம். ‘மொசேயிக்‘ தரை, கார்ப்பெட் இல்லே, ‘போட்டுக்கலாமா’ன்னு கேட்டேன், ‘சரி’ன்னுட்டான். உங்களுக்கு என்ன, புஸ்தகந்தானே படிக்கணும், உங்க ‘பர்ஸனல் லைப்ரரி’யை அங்கே ‘மூவ்’ பண்ணிக்கலாம். இப்பொல்லாம், ‘கம்மூயுனிகேஷனை’ப் பத்திக் கவலையே இல்லே... ‘இன்டெர்னெட்’, ‘வீடியோ கான்ஃப்ரென்ஸிங்’ அது, இதுன்னு வந்தாச்சு... ‘வி கான் ஆல்வேஸ் பி இன் டச்‘... உங்களுக்கு என்ன ஆச்சோன்னு எங்களுக்கும் கவலையில்லாமே இருக்கும். ‘கம்யூனிட்டி லைஃப்’, ஒத்தரை ஒத்தர் பாத்துக்க முடியும்... யோசிச்சு சொல்லுங்க... எனக்கு நாலு வாரந்தான் ‘லீவு’, அதுக்குள்ள ஏதானும் ஏற்பாடு செய்தாகணும்.”

“நான் என்ன யோசிக்கிறதுக்கு இருக்கு? எனக்காக நீ நிறைய யோசிச்சு வச்சிருக்கே போலிருக்கே?”

“அங்கே முழுநேர டாக்டர் ஒத்தர் இருக்கார். இரண்டு நர்ஸ், ‘கிளினிக்‘, ‘பார்மஸி’ எல்லாம் இருக்கு. ‘ஸ்பெஷலிஸ்ட்’ டைப் பாக்கணும்னாலும் ஏற்பாடு செய்து தருவா. நீங்க இடத்தைப் பாருங்க, யூ வில் லைக் இட்.”

நடேசன், உலாவிக் கொண்டிருந்தவர், சோபாவில் உட்கார்ந்தார், கண்களை மூடிக்கொண்டார்.

“என்னப்பா சொல்றீங்க?” என்றான் பிரபு.

“இன்னும் இருக்கிற மூணு வாரத்திலே இந்த வீட்டை உன்னால வித்துட முடியுமா?”

“ஏன் முடியாது? ‘ப்ரைம் லொக்கலிட்டி’, பெரிய வீடு, பிரச்னையே இருக்காது. போட்டிப்போட்டுண்டு வருவாங்க...”

“யாரையானும் பாத்து வச்சிருக்கியா?”

‘‘என்னப்பா, இப்படிப் பேசறீங்க, நீங்க ‘எஸ்’னு சொல்லாமெ நான் விக்கறதுக்கு ஆளைப் பாப்பேனா?” என்றான் பிரபு சற்றுக் கோபத்துடன்.

“உன் அப்பா, அம்மா, தாத்தா, பாட்டி, இருந்த வீட்லே இருக்கணுங்கிற ஆசையே உனக்கு இல்லையா?” என்றார் அவர், கண்களைத் திறந்துகொண்டே.

“அப்பா, நாம கொஞ்சம் ‘ப்ராக்டிகலா’ பேசுவோம். நான் திரும்பி வந்து இங்கே இருப்பேனான்னு எனக்கு இப்பொ தெரியலே. உலகம் மாறிண்டே இருக்கு. ‘வீ ஹவ் டு மூவ் ஆன்... உங்க ‘செண்டிமென்ட்’ எனக்குப் புரியறது. என்னையும் நீங்க புரிஞ்சுக்கணும்.”

நடேசன் ஒன்றும் கூறாமல் அவனையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தார். 'சென்டிமென்டைக் கொன்றுவிடு, அல்லது மூச்சை நிறுத்திவிடு' என்று பாரதி பாடியிருக்க வேண்டும். பிரபுவின் நிலையில் நின்று பார்த்தால் அவனைப் புரிந்துகொள்ள முடிகிறது.

"நாளைக்கு நான் சொன்ன இடத்தைப் பாக்கலாமா, அப்பா?" என்றான் பிரபு.

அவர் 'சரி'யென்று தலை அசைத்தார்.

நகரத்தை விட்டுத் தள்ளியிருந்தாலும் துப்புராவாய் இருந்தது அந்த இடம். பிரபு சொன்னது போல் எல்லா வசதிகளுமிருந்தன. ஏ.சி, டி.வி, ஃபர்னிச்சர், எல்லாம் முதல் தரத்தில் இருந்தன. நூல் நிலையத்தில் தமிழிலும் ஆங்கிலத்திலும் பிரபலப் பத்திரிகைகள் எல்லாம் இருந்தன. சில புஸ்தகங்களும் இருந்தன. 'குறுகிய காலத்தில் வெற்றிபெறுவது எப்படி' என்ற நூல் ஒன்றை நடேசன் வயதை ஒத்த ஒருவர் படித்துக்கொண்டிருந்தார்.

இந்த நம்பிக்கை தமக்கும் வரக்கூடிய சாத்தியம் இருக்கிறது என்ற எண்ணம் வந்ததும் புன்னகை செய்தார் நடேசன்.

ஒரு கோயில் இருந்தது. சிவன், விஷ்ணு, முருகன், பிள்ளையார், துர்க்கை, ஆகிய எல்லா தெய்வங்களுக்கும் சன்னதி. நவக்கிரகவழிபாட்டுக்கும் வசதி இருந்தது. அவர்கள் போன போது ருத்ர ஹோமம் நடந்து கொண்டிருந்தது.

மாதிரிஇல்லத்தைக்காட்டவேண்டுமென்பதற்காக நிர்வாகி அவர்களை ஒருவர் 'அப்பார்ட்மென்ட்'டுக்கு, அவர் அனுமதி கேட்டு அழைத்துச் சென்றார்.

அவருக்கு எண்பத்தைந்து வயதிருக்கும். முதுகு கூனியிருந்தது. கூர்மையான பார்வை.

"வாங்கோ" என்று முகமே புன்னகையாக வரவேற்றார்.

"கொள்ளுப் பேத்தி அழுதிண்டிருந்தா. நீங்க வந்தேள்," என்றார் அவர்.

நடேசன் சுற்றுமுற்றும் பார்த்தார். யாருமில்லை.

"என்ன பாக்கிறேள், யாரையும் காணும்னா? இதோ பாருங்கோ" என்று சொல்லிக்கொண்டே கிழவர் கையிலிருந்த 'ரிமோட்'டை இயக்கினார். டி.வி.யில் படங்கள் வந்தன. ஒரு குழந்தை தொட்டிலில் இருந்தது. அதைச் சுற்றி சிலர் குனிந்து பார்த்துக் கொண்டிருந்தனர்.

"வலது பக்கம் நிக்கிறானே, அவன்தான் என் பிள்ளை. அவன் பக்கத்திலே என் பேரன், இந்தப் பக்கமா நிக்கறது என் மாட்டுப் பொண்ணு. அவ பக்கத்திலே அவ மாட்டுப் பொண்ணு. தொட்டில்லே என் கொள்ளுப் பேரன். 'சௌன்ட்' போடட்டுமா?" என்று கூறியவாறு 'ரிமோட்'டை அழுத்தினார் அவர். குழந்தை காலை உதைத்துக் கொண்டு அழுதது.

"என் பிள்ளையும் இப்படித்தான் அழுவான் சின்ன வயசிலே" என்றார் கிழவர். அவர் கண்கள் கசிந்திருந்தன.

அவர்கள் வீட்டுக்குத் திரும்பியதும், பிரபு கேட்டான்: "எப்படிப்பா இருக்கு?"

"குட். ஆனா இது 'அப்பர் மிடில்கிளாஸ்'க்குத்தான்னு நினைக்கிறேன், இல்லியா?" என்றார் நடேசன்.

"அஃப் கோர்ஸ். முக்கால்வாசிப் பேர்களுடைய குழந்தைகள் வெளிநாடுகள்ளே இருக்காங்க. அந்தக் கிழவர் வீட்டுக்குப் போனோமே, அவர் எவ்வளவு சந்தோஷமா இருக்கார் பாத்தீங்களா? அதுதான் அவருக்கு 'ரியாலிட்டி' இல்லியா?" என்றான் பிரபு.

நடேசன் பதில் ஒன்றும் கூறவில்லை.

"உங்களுக்குப் பிடிச்சிருக்கான்னு கேட்டேன், நீங்க பதிலே சொல்லலியே?"

"நம்ம நாட்டிலேயே இருக்கிற வசதி இல்லாத ஏழை அப்பா - அம்மா எல்லாரும் என்ன பண்ணுவா? மாட்டுப் பொண்ணு போட்டதுதான் சோறுன்னு இருப்பாளா?" என்றார் நடேசன்.

"நீங்க என்ன கேக்கிறேள்னு எனக்குப் புரியலே, நான் கேட்டதுக்கும் நீங்க பதில் சொல்லறதுக்கும் என்ன சம்பந்தம்?" என்றான் பிரபு சற்று உரத்த குரலில்.

"சம்பந்தம் இருக்கு. நீயே சொன்னே நம்ம வீடு பெரிசு, வாங்கிறவங்க கொத்திண்டு போயிடுவாங்கன்னு. வீட்டை விக்கணும்னு அவசியமில்லே," என்று சொல்லிவிட்டு நிறுத்தினார் நடேசன்.

"ஓ.கே. விக்க வேண்டாம்... என்ன பண்ணணுங்கிறீங்க?"

"நம்ம வீட்டையே 'ஹோம்' ஆக்கப் போறேன். நாலு ஏழைக் குடும்பம் தராளமா இங்கே இருக்கலாம். துணைக்குத் துணையும் ஆச்சு, நீயும் உங்க ஊர்லே அப்பாவைப் பத்திக் கவலைப்படாமெ இருக்கலாம். நான் இந்தத் தடவை 'ஹார்ட் அட்டாக்'க்லேந்து ஏன் தப்பிச்சேன்னு எனக்கு இப்பொ புரியறது. எல்லாத்துக்கும் காரணம் இருக்கத்தான் வேணும். அது ஈஸ்வர சித்தமோ என்னவோ, என்னன்னு எனக்குச் சொல்லத் தெரியலே. இன்னொரு விஷயம். உனக்குப் பேரனோ பேத்தியோ பொறந்தா, வீடியோ எடுத்து அனுப்பு, மறந்துடாதே!" என்றார் நடேசன்.

**இந்திரா பார்த்தசாரதி**

<parthasarathyindira@gmail.com>

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



₹110



₹80



₹120



₹60




₹100




₹100



₹750




₹100




₹150

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 94440 70000, 044 2435 3555.
மின்னஞ்சல்: info.amrudha@gmail. com. இணையதளம்: www. amruthamagazine. com

#  அம்ருதா பதிப்பகம் வெளியீடுகள்

முத்துக்கள் பத்து வரிசை நூல்கள்
சிறந்த எழுத்தாளர்களின் தேர்ந்தெடுத்த
10 சிறுகதைகள்

**பி. எஸ். ராமையா**
பக். 80, விலை ரூ. 50

**புதுமைப்பித்தன்**
பக். 48, விலை ரூ. 30

**ந. பிச்சமூர்த்தி**
பக். 80, விலை ரூ. 50

**எம். வி. வெங்கட்ராம்**
பக். 64, விலை ரூ. 50

**லா. ச. ரா**
பக். 80, விலை ரூ. 50

**கல்கி**
பக். 96, விலை ரூ. 60

**தி. ஜ. ர**
பக். 80, விலை ரூ. 50

**தி. ஜானகிராமன்**
பக். 96, விலை ரூ. 60

**ஜெயகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**கு. அழகிரிசாமி**
பக். 96, விலை ரூ. 60

**அசோகமித்திரன்**
பக். 64, விலை ரூ. 40

**சா. கந்தசாமி**
பக். 112, விலை ரூ. 70

**ஆ. மாதவன்**
பக். 80, விலை ரூ. 50

**ஆதவன்**
பக். 96, விலை ரூ. 60

**பிரமிள்**
பக். 96, விலை ரூ. 60

**வண்ணநிலவன்**
பக். 64, விலை ரூ. 40
**வண்ணதாசன்**
பக். 64, விலை ரூ. 40

**நாஞ்சில்நாடன்**
பக். 80, விலை ரூ. 50

**ராஜம் கிருஷ்ணன்**
பக். 112, விலை ரூ. 70

**விட்டல்ராவ்**
பக். 64, விலை ரூ. 40

**பா. செயப்பிரகாசம்**
பக். 160, விலை ரூ. 100

**நீல. பத்மநாபன்**
பக். 80, விலை ரூ. 50

**தமிழ்ச் செல்வன்**
பக். 64, விலை ரூ. 40

**கந்தர்வன்**
பக். 80, விலை ரூ. 50

**கோணங்கி**
பக். 64, விலை ரூ. 40

**சூர்யகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**ஜெயந்தன்**
பக். 160, விலை ரூ. 100

**மொழிபெயர்ப்பு நாவல்கள்**
**மிருகங்களின் பண்ணை**
ஜார்ஜ் ஆர்வெல்
பக். 120, விலை ரூ. 75

**பாரதிபுரம்**
யு.ஆர். அனந்தமூர்த்தி
தமிழில்: தி.சு. சதாசிவம்
பக். 240, விலை ரூ. 150

**பிறவாத குழந்தைக்கு ஒரு கடிதம்**
ஓரியானா ஃபேலஸி
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**பெண்ணே கேள்**
கிருஷ்ணா ஸோப்தி
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 112, விலை ரூ. 70
**சிதைந்தகூடு**
தாகூர்
பக். 80, விலை ரூ. 50

**நெருப்பு நிலா**
வாசி ரெட்டி சீதா தேவி
பக். 160, விலை ரூ. 100

**ஒரு லாரி டிரைவரின் கதை**
சிங்கிஸ் ஐத்மாத்தவ்
தமிழில்: தா. பாண்டியன்
பக். 128, விலை ரூ. 80

**மாயாபுராணம்**
பி. சுரேந்திரன்
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**மொழிபெயர்ப்பு சிறுகதைகள்**
**சல்வடார் டாலி**
உலகச் சிறுகதைகள்
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 192, விலை ரூ. 120

**குதிரில் உறங்கும் இருள்**
பாப்லோ நெருடா
பக். 112, விலை ரூ. 70

**ஒரு வார்த்தையின் பொருள்**
ப்ரஃபுல்லா ராய்
வங்காளத்தில் இருந்து: புவனா நடராஜன்
பக். 224, விலை ரூ. 140

**அண்மைக்காலவங்காளச்சிறுகதைகள்**
தமிழில்: சு. கிருஷ்ணமூர்த்தி
பக். 240, விலை ரூ. 150

**அன்புள்ள பிலாத்துவுக்கு**
பால் சக்கரியா. தமிழில்: திலகவதி
பக். 96, விலை ரூ. 60

**யௌவனத்தின் கடல்**
நவீன மலையாள சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: குளச்சல் மு. யூசுப்
பக். 288, விலை ரூ. 180

**உள்ளுக்குள் ஓடும் ஆறு**
வடகிழக்கு இந்திய சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: வெ. இன்சுவை
பக். 144, விலை ரூ. 90

**மண்வாசல்**
பிரேம்சந்த்
தமிழில்: ரமேஷ்குமார்
பக். 96, விலை ரூ. 60

**சிறுகதைகள்**
**சித்திரக்கூடம்**
லஷ்மி மணிவண்ணன்
பக். 128, விலை ரூ. 80

**அன்னை தந்த ஒளி**
பெ. தூரன்
பக். 80, விலை ரூ. 50

**அறிஞர் அண்ணா சிறுகதைகள்**
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 160, விலை ரூ. 100

**அவள் அதுவானாள்**
பா. விசாலம்
பக். 80, விலை ரூ. 50

**வான்கோவின் காது**
கீதாஞ்சலி
பக். 112, விலை ரூ. 70

**பழைய காலண்டரில் இருதினங்கள்**
பாலு சத்யா
பக். 128, விலை ரூ. 80

**மீண்டெழுதல்**
இல. வின்செண்ட்
பக். 128, விலை ரூ. 80

**வண்ணத்துப் பூச்சிகளும் பெண்களும்**
சூர்யகுமாரன்
பக். 120, விலை ரூ. 75

**நாவல்**
**சுகுண சுந்தரி சரித்திரம்**
வேதநாயகம் பிள்ளை
பக். 112, விலை ரூ. 70
**முள்ளும் மலரும்**
உமா சந்திரன்
பக். 288, விலை ரூ. 180

**டணாயக்கன் கோட்டை**
இ. பாலகிருஷ்ணநாயுடு
பக். 480, விலை ரூ. 300

**அசன்பே சரித்திரம்**
எம்.சி. சித்திலெவ்வை
பக். 128, விலை ரூ. 80

**ஓடும் நதி**
சுப்ரபாரதிமணியன்
பக். 240, விலை ரூ. 150

**சாகசப் பறவைகள்**
எஸ்ஸாரெஸ்
பக். 180, விலை ரூ. 90

**கட்டுரைகள்**
**இந்தியா - மர்மமும் சவாலும்**
இ.எம். பாஸ்டர்
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 192, விலை ரூ. 120

**உலகை மாற்றிய புத்தகங்கள்**
ராபர்ட் டவுன்ஸ்
பக். 240, விலை ரூ. 150

**ஜெயகாந்தன் சிந்தனைகள்**
தேர்வும் தொகுப்பு: திலகவதி
பக். 112, விலை ரூ. 70

**தமிழகக் கோட்டைகள்**
விட்டல்ராவ்
பக். 240, விலை ரூ. 150

**என் பார்வையில் படைப்பிலக்கியம்**
முருகேச பாண்டியன்
பக். 240, விலை ரூ. 150

**என்றென்றும் வாழும் படைப்புகளும் படைப்பாளர்களும்**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**மூச்சுத் திணறுது பூமி**
மருத்துவர் வி. ஜீவானந்தம்
பக். 120, விலை ரூ. 75

**பெண்ணொன்று கண்டேன்**
பாமரன்
பக். 112, விலை ரூ. 70

**ஆரிய உதடுகள் உன்னது**
பாமரன்
பக். 64, விலை ரூ. 40

**சொல்லப்படாத உலகம்**
யமுனா ராஜேந்திரன்
பக். 96, விலை ரூ. 60

**பாலமாகி நிற்கும் பணி**
யமுனா ராஜேந்திரன்
பக். 160, விலை ரூ. 100

**ஈழத்து அரசியல் நாவல்**
யமுனா ராஜேந்திரன்
பக். 112, விலை ரூ. 70

**திரைப்படங்களான இலக்கியங்களும் நாடகங்களும்**
அறந்தை மணியன்
பக். 128, விலை ரூ. 80

**திரைவெளி**
சுப்ரபாரதிமணியன்
பக். 128, விலை ரூ. 80

**அசோகமித்திரன் 77**
சுப்ரபாரதிமணியன்
பக். 144, விலை ரூ. 90

**நெஞ்சு பொறுக்குதில்லையே**
சாவித்திரி கண்ணன்
பக். 192, விலை ரூ. 120

**கிட்டத்தட்ட கடவுள்**
சி. சரவணகார்த்தியேன்
பக். 154, விலை ரூ. 135

**பாம்பின் கால்த்தடம்**
பிரபு திலக்
பக். 200, விலை ரூ. 125

**பறை**
மருத்துவர் எம். வளர்மதி
பக். 144, விலை ரூ. 90

**தமிழ்ச் சூழலில் அறிவியல் புதினங்கள்**
நெல்லை சு. முத்து
பக். 192, விலை ரூ. 120

**மிக அருகில் மிருகம்**
மருத்துவர் ஆர். கோவிந்தராஜ்
பக். 128, விலை ரூ. 80

**கவிதை**
**விக்ரமாதித்யன் கவிதைகள்**
தேர்வும் தொகுப்பும்: வித்யாஷங்கர்
பக். 560, விலை ரூ. 350

**சொட்டுச் சொட்டாய் விழுகின்றன செவ்வரளிப் பூக்கள்**
என்.டி. ராஜ்குமார்
பக். 80, விலை ரூ. 50

**காதலியர் மேன்மை**
தபசி
பக். 160, விலை ரூ. 100

**திரைக்கதை**
**இம்சை அரசன் 23ஆம் புலிகேசி**
சிம்பு தேவன்
பக். 160, விலை ரூ. 100

**ஆட்டோகிராப்**
சேரன்
பக். 208, விலை ரூ. 130

**நாடகம்**
**முன்மேடை**
அ. ராமசாமி
பக். 144, விலை ரூ. 90

**கள்ளத் தோணி**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**வாழ்க்கை வரலாறு**
**பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு**
ஏ.எல். நடராஜன்
பக். 240, விலை ரூ. 150

**சுய முன்னேற்றம்**
**வாழ்க்கை வாழ்வதற்கே**
மருத்துவர் திருநாவுக்கரசு
பக். 160, விலை: ரூ. 210

**மனம்**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 112, விலை ரூ. 70

**போதை?**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 160, விலை ரூ. 100

**வெற்றிப்பாதை**
சுரேஷ்குமார்
பக். 128, விலை ரூ. 80

## திலகவதி நூல்கள்

**கல்மரம்**
சாகித்திய அகாதமி விருது பெற்ற நாவல்
பக். 96, விலை ரூ. 60

**உனக்காகவா நான்**
நாவல்
பக். 80, விலை ரூ. 50

**நேசத்துணை**
நாவல்
பக். 128, விலை ரூ. 80

**சொப்பன பூமியில்**
நாவல்
பக். 104, விலை ரூ. 65

**தமிழ்க் கொடியின் காதல்**
நாவல்
பக். 144, விலை ரூ. 90

**மூங்கில் திரை**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**மரப்பாலம்**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

## முத்துக்கள் பத்து
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தீப்பறவையின் கூடு**
சிறுகதைகள்
பக். 186, விலை ரூ. 120

**சக்கர வியூகம்**
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தொப்புள் கொடி**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**உங்களுக்காக உலக சினிமா**
கட்டுரைகள்
பக். 360, விலை ரூ. 225

**காலந்தோறும் அறம்**
கட்டுரைகள்
பக். 96, விலை ரூ. 60

**நபி (ஸல்) நமக்குச் சொன்னவை**
கட்டுரைகள்
பக். 120, விலை ரூ. 75

**சேகுவேரா**
வாழ்க்கை வரலாறு
பக். 80, விலை ரூ. 50

**முடிவெடு**
சுய முன்னேற்ற நூல்
பக். 144, விலை ரூ. 90

**இப்படித்தான் வென்றார்கள்**
கேள்வி-பதில்கள்
பக். 208 , விலை ரூ. 130

**காலத்தின் கண்ணாடி**
தொகுப்பு நூல்
பக். 1200, விலை ரூ. 750

**கோடை உமிழும் குரல்**
தொகுப்பு நூல்
பக். 400, விலை ரூ. 250

நூல்களை பெற +91 94440 70000 என்ற எண்ணுக்கு அழைக்கவும். அல்லது குறுஞ்செய்தி / வாட்ஸ் அப் செய்தி அனுப்பினால் நாங்கள் தொடர்புகொள்கிறோம். info.amrudha@gmail.com மின்னஞ்சல் முகவரி மூலமாகவும் தொடர்புகொள்ளலாம்.

அம்ருதா சந்தாதாரர்கள் நூல்களை 60% விலை குறைப்பில் பெற்றுக்கொள்ளலாம். நூல்களை சென்னை அம்ருதா அலுவலகத்திலும் புத்தகக் காட்சிகளில் அம்ருதா ஸ்டால்களிலும் நேரிலும் பெற்றுக்கொள்ளலாம்.

**அம்ருதா, 1 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சிஐடி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை - 600035**

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

